# திருக்கோயில்

"என்கடன் பணி செய்து கிடப்பதே"





ஆறுமுகப்பெருமான்
திருச்செந்தூர்

மாலை 10] பிலவங்க - ஐப்பசி - நவம்பர், 1967 [மணி 2

சென்னை அரசாங்க அறநிலையப்



நமது அறநிலைய அமைச்சர் மாண்புமிகு நாவலர் திரு. இரா. நெடுஞ்செழியன் எம். ஏ. அவர்கள், திருவாவடுதுறை ஆதீனத்திற்கு வருகை தந்து, 22 ஆம் பட்டத்து மகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்களிடம் உரையாடி மகிழ்தல். ( 21-10-67 )

## பொருளடக்கம்



## சந்தாதாரர்களுக்கு வேண்டுகோள்


ஆண்டுச் சந்தா ரூ. 10/-    தனி இதழ் விலை ரூ. ஒன்று

'திருக்கோயில்' இதழின் சந்தாதாரர்கள் ஆகச் சேர விரும்புபவர்கள் " திரு. ஆணையர் அவர்கள், அறநிலைய ஆட்சித்துறை, சென்னை-34 " என்னும் முகவரிக்கு ரூபா பத்து அனுப்பி, எப்போது வேண்டுமாயினும் சந்தாதாரர்கள் ஆகச் சேர்ந்து கொள்ளலாம்.

அல்லது, அவ்வவ் வட்டார அறநிலைய உதவி ஆணையாளர்களின் அலுவலகங்களிலும், மேற்படி சந்தாத் தொகையைச் செலுத்திச் சேரலாம்.

சந்தாதாரர்கள் தங்களுடைய சரியான முழு முகவரியைத் தெரிவித்துதவுதல், இதழ்கள் தவருமற் சேர்தற்கு மிகவும் இன்றியமையாதது.

—ஆசிரியர்.




மாலை 10] பிலவங்க - ஐப்பசி - நவம்பர், 1967 [மணி 2

# கந்தர் சஷ்டி விழா

தமிழக மக்களால் கொண்டாடப் பெறும் சமய விழாக்கள் பலவற்றில், 'கந்தர் சஷ்டி விழா' என்பது, மிக்க சிறப்புடைய தொன்றாகும். முருகப் பெருமான், சூர பதுமன் முதலிய அசுரர்களைக் கொன்று தேவர்களையும் முனிவர்களையும், பிற எல்லா உலகத்து உயிர்களையும் பாதுகாத்துச் செய்தருளிய தண்ணளியினை மிகவும் நினைந்து வியந்து நன்றியுடன் போற்றி வழிபடும் விழாவே, கந்தர் சஷ்டி விழாவாகும். ஐப்பசி மாதத்தில் வளர்பிறையில் முதல் ஆறு நாட்களில், தேவர்களும் முனிவர்களும் முருகனின் திருவருட்டிறத்தினைப் பெரிதும் போற்றி, நன்றியுணர்வுடன் வழிபடுவாராயினர். அவர்கள் வழிபட்ட அந்த ஆறு நாட்களில் கொண்டாடப் பெறும் விழாவே கந்தர் சஷ்டி விழாவாகும்.

"வெற்பொடும் அவுணன் தன்னை
வீட்டிய தனிவேற் செங்கை
அற்புதன் தன்னைப் போற்றி
அமரரும் முனிவர் யாரும்
சொற்படு துலையின் திங்கட்
சுக்கில பக்கம் தன்னில்
முற்பகல் ஆதி யாக
மூவிரு வைகல் நோற்றார்!

—கந்தபுராணம்

செந்தமிழ் அன்பும் சிவநெறிப் பற்றும் உடைய முருகன் அடியார்கள் அனைவருக்கும், கந்தர் சஷ்டி விழா மிக்க புனிதமும் சிறப்பும் வாய்ந்ததாகும். தமிழகத்து உள்ள முருகன் தலங்களிலெல்லாம், பல்லாயிரக் கணக்கான அன்பர்கள் கந்தர் சஷ்டி விழாவில் நோன்பிருந்து முருகனைப் போற்றி வழிபட்டு மகிழ்வர். இத்தகைய கந்தர் சஷ்டி விழாவின் சிறப்பை விளக்கும் முறையில் உள்ள, பின்வரும் ஓர் இலக்கியக் குறிப்பு, நாம் அறிந்து பெரிதும் மகிழ்தற்குரியது.

திரிகூட ராசப்பக் கவிராயர் என்பவர், ஏறத்தாழ 200 ஆண்டுகட்கு முன்பு இருந்தவர். பிற்காலக் கவிஞர்களுள் பெரிதும் சிறப்புற்றவர். அவர் இயற்றிய நூல்கள் பல. அவற்றுள் குற்றாலத் தலபுராணமும், குற்றாலக் குறவஞ்சியும் மிகவும் புகழ் பெற்றவை.

குற்றாலத் தலபுராணம், சொற் பொருட் சுவை நலங்கள் பலவும் துளும்பித் திகழ்வது; கற்றுவல்ல புலவர்களால் மிக்குயர்த்துப் போற்றப்படுவது.

'குற்றாலக் குறவஞ்சி' என்பதோ, இயலிசை நாடகம் என்னும் முத்தமிழ்க்கும் நிலைக்களனாய் விளங்கி, எவரையும் மகிழ வைக்கும் மாட்சிமை உடையது.

குறவஞ்சி என்பது, குறத்தி ஒருத்தி குறி சொல்லுவது போலப் பாடப்படும் ஒரு சிறு பிரபந்தம். அப் பிரபந்தம் பொதுவான பலவகைச் செய்திகளோடு, குறவர் குறத்தியரின் செயல் இயல்களும் விளங்குமாறு, நாடகப் பாங்கு அமைய நன்கியைத்துப்

பாடப் பெறும். அம்முறையை ஒட்டிவரும் ஒரு பகுதியில், குற்ருலக் குறவஞ்சியின் கண் கந்தர் சஷ்டி விழாவைப் பற்றிய குறிப்பு ஒன்றும், சுவைமிக வருகின்றது.

"வள்ளிக் குறத்தியை மணந்த முருகக் குறவன், முதல் வேட்டைக்குப் போனுன். ஆறு நாட்கள் கழித்து அவனுக்கு ஒரு கொக்கு அகப்பட்டது. அக் கொக்கை அவித்து, ஒரு சட்டியில் அவன் சாறு (குழம்பு) வைத்தான். (புலாலை வெறுக்கும்) வேதப் பிராமணர், சைவர், முனிவர் ஆகிய எல்லோரும், கொக்கை அவித்த சட்டிச்சாறு (சூரபதுமனுகிய மாமரத்தை அழித்த கந்தர் சஷ்டி விழா) மிகவும் நன்ருக உள்ளது என்று ஏற்றுக் கொண்டனர்"

"மீறும் இலஞ்சிக் குறத்தியைக் கொண்டசெவ்
வேட்குறவன், முதல் வேட்டைக்குப் போன நாள்,
ஆறுநாட் கூடி ஒரு கொக்குப் பட்டது;
அகப்பட்ட கொக்கை அவித்து, ஒரு சட்டியில்
சாருக வைத்தபின் வேதப் பிராமணர்
தாமும் கொண்டார்! சைவர் தாமும் கொண்டார்! தவப்
பேரு முனிவரும் ஏற்றுக் கொண்டார்! இதைப்
பிக்குச் சொல் லாமலே கொக்குப் படுக்கவே."

—குற்ருலக் குறவஞ்சி.

இச் செய்யுளில் முருகனைக் 'குறவன்' என்ற பொருத்தமும், அவன் சூரபதுமனேடு செய்த போரினை 'முதல் வேட்டை' என்ற சிறப்பும் நயம் செறிந்தன. மேலும் இதன்கண்,

கொக்கு—பறவை, மாமரம்.
அவித்தல்—வேகவைத்தல், அழித்தல்.
சட்டி—மட்கலம், சஷ்டி.
சாறு—குழம்பு, விழா.
வைத்தல்—காய்ச்சுதல், நிகழச் செய்தல்.

என இருபொருட் குறிப்பு அமையும்படி வழங்கிய புலவரின் சொல்லாட்சித் திறனும், பெரிதும் போற்றத் தக்கதாகும்.

கந்தர் சஷ்டி விழா, வேதப் பிராமணர் சைவர் முனிவர் ஆகிய பெருமக்களெல்லாரும் மகிழ்ந்து ஏற்றுக் கொண்டாடிவரும் மாண்புடையது என்பதனை, இப்பாடலில் கவிஞர் இன்சுவை பொருந்த விளக்கியிருத்தல் காணலாம்.

—ஆசிரியர்.



# "குடத்தைப் பிடித்தவன் சட்டி"

கந்தர் சஷ்டி விழாவின் சிறப்பினை விளக்கும் முறையில், வேறு ஒரு தனிப்பாடலும் உண்டு. பண்டைக் காலத்தில் ஆசிரியர்கள் தம் மாணவர்களுக்குக் கவிதை இயற்றக் கற்றுக் கொடுப்பதற்காக அவ்வப்போது ஏதேனும் ஓர் ஈற்றடியைக் கொடுத்து, அதனை ஒட்டி ஏனைய மூன்று அடிகளை ஏற்றவாறு அமைத்துச், சிறந்த பொருள் அல்லது கருத்துப் பொருந்துமாறு செய்யுள் இயற்றும்படி பணிப்பர். இதனைச் சிலர் 'சமஸ்யை' என வழங்குவர்.

ஒருநாள் ஓர் ஆசிரியர், தமது மாணவர் ஒருவருடன், ஒரு தெரு வழியே சென்று கொண்டிருந்தார். அத்தெரு குயவர் தெரு. ஆதலின் அங்கே இருந்த பலரும், குடம் சட்டி முதலியன வனைந்து கொண்டிருந்தனர். அதனைக் கண்ணுற்ற ஆசிரியர் தமது மாணவரை நோக்கி விளையாட்டாக,

" குடத்தைப் பிடித்தவன் சட்டியை
நோக்கக் குறைவில்லையே"

என்னும் ஓர் ஈற்றடியைத் தம் உள்ளத்தில் உருவாக்கிக் கூறி, அதனை அமைத்து ஒரு செய்யுள் இயற்றும்படி கட்டளை யிட்டார்.

உடனே மாணவர் அவ்வீற்றடிக்கு ஏற்ப முதல் மூன்றடிகளை யாத்து, குடம் சட்டி என்னும் சொற்களை நயம்பட அமைத்து, ஒரு செய்யுளை இயற்ற முற்பட்டார். கந்தர் சஷ்டி விரதத்தை நாம் அன்புடன் கடைப்பிடித்து, முருகனை வழிபட்டால், நமக்கு எல்லா நலங்களும் எய்துதல் திண்ணம், என்னும் சிறந்த பொருளை அமைக்க விரும்பினார்.

முருகன் கோழிக் கொடியை உடையவன். கோழி கூவினாற் பேய்கள் ஓடி மறைந்து ஒழியும்; இருளும் தீங்கும் நீங்கும் * ஆதலின் வாழ விரும்புவோர் அனைவரும் கோழிக் கொடியைச் சிறப்பாகக் கொண்டுள்ள முருகனைத் தொழுது பணிதல் வேண்டும். இதனையே "கோழிக் கொடியன் அடிபணியாமற் குவலயத்தே வாழக் கருதும் மதியிலிகாள்" என்னும் கந்தரலங்காரப் பாடல் வரியால், அருணகிரிநாதர் அறிவுறுத்தார். சேவலைக் கொடியாக உடைய முருகன் காப்பதனாலேயே, உலகத்திலுள்ள உயிர்கள் இன்பமாக வாழ்கின்றன.

"சேவலங் கொடியோன் காப்ப
ஏம வைகல் எய்தின்றால் உலகே"

என்பது குறுந்தொகைப் பாடல். இவற்றை யெல்லாம் எண்ணினார் அம் மாணவர்! கோழிக்குக் குக்குடம் என்பது ஒரு பெயர். ஆசிரியர் அளித்த ஈற்றடியில் உள்ள 'குடத்தைப் பிடித்தவன்' என்னும் தொடரைக் 'குக்குடத்தைப் பிடித்தவன்' என்று ஏற்ற பெற்றி இயைத்துப் பாடலை இயற்றி முடித்தார்.

---

* "The Cock, that is the trumpet to the morn,
Doth with his lofty, and shrill-sounding throat,
Awake the god of day; and, at his warning,
Whether in sea or fire, in earth or air,
The extravagant and erring spirit hies
To his confine."

—*William Shakespeare,*
Hamlet.

"குக்குடத்தை (கோழிக் கொடியை)ப் பிடித்தவன் (முருகன்); அவனது சட்டியை (சஷ்டி விரதத்தினை), நோக்க (அனுட்டித்து வர), குறைவில்லை (நமக்கு யாதொரு குறையும் நேராது)" என்னும் அழகிய இனிய அரிய கருத்தினைப் புலப்படுத்தி, அதற்கு ஏற்ற எதுகை மோனை முதலிய செய்யுள் உறுப்புக்களைத் தக்கவாறு பொருத்தி, அம் மாணவர் கட்டளைக் கலித்துறைச் செய்யுள் ஒன்றைக் கவினுறப் பாடிக் காட்டினர்.

கந்தர் சஷ்டி விரத வழிபாட்டின் பயனை வலியுறுத்தும் சுவை மிகுந்த அந்தச் செய்யுள் யாவரும் அறிந்து மகிழற்பாலது.

கடத்தைப் பழித்துக் களபம்
திமிர்ந்து கனகமணி
வடத்தைத் தரித்துச் சுணங்கு
படர்ந்தொளிர் வளவிதன
தடத்தைத் தழுவும் தனது
மலர்க்கைத் தலத்தினில், குக்
குடத்தைப் பிடித்தவன் சட்டியை
நோக்கக் குறைவில்லையே

—தனிப்பாடல்

இச் செய்யுளில் குடம் என்பதனைக் குக்குடம் எனவும், சட்டி என்பதனைச் சஷ்டி என்னும் சொல்லின் தமிழ் வடிவமாகவும் ஏற்ற பெற்றி அமைத்து, இனிய செய்யுள் ஒன்றைக் கவிஞர் இயற்றியுள்ள திறம் மிகவும் வியந்து இன்புறற் பாலது.

—ஆசிரியர்





வள்ளி தெய்வயானை சமேத திரு முருகப் பெருமான்

# "சட்டியும் அகப்பையும்"

"சொல்லில் உயர்வு தமிழ்ச் சொல்லே" எனப் பாடினர் பாரதியார். மனிதன் கையாளும் கருவிகளுள், மிக்க சிறப்பும் ஆற்றலும் உடைய கருவி, சொல்லேயாகும். 'வில்லம்பிற் சொல்லம்பு வீறுடைத்து' என்பது பழமொழி. சொற்களை நாம் திறனறிந்து கையாளுதல் வேண்டும். ஒருவனுக்குத் தான் பேசும் சொல்லினாலேயே ஆக்கமும் கேடும் வருதல் கூடும். அதனாலேயே திருவள்ளுவர் 'திறனறிந்து சொல்லுக சொல்லை' என்றும், "காத்து ஓம்பல் சொல்லின்கட் சோர்வு" என்றும் அறிவுறுத்தி அருளுவாராயினர்.

'வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம்' என்பது பழமொழி. சிறந்த அறிஞர்கள் எளிய இயல்பான சொற்களையும்; சிறந்த உயர்ந்த பொருள்கள் பயக்கும்படி திறம்படக் கையாளுவர். சிறந்த அறிஞர்களின் புலமை மதிநலத்தால், இரச வேதியால் இழிந்த இரும்பும் உயர்ந்த பொன்னாக மாறி மின்னுதலைப் போல, எளிய சிறு சொற்களும், அரிய பொருள்களை உணர்த்தும் ஆற்றலைப் பெறும்.

'சட்டி' 'அகப்பை' என்னும் சொற்கள் சாதாரண எளிய சிறு சொற்களே ஆகும். எனினும், இவற்றின் வாயிலாக உயர்ந்த கருததை நம் தமிழ் முன்னோர்கள் உணர்த்தி யுள்ளனர்.

ஒரு நாட்டின் சிறப்பையும் நாகரிகத்தையும் விளக்கும் சான்றுகள் பலவற்றுள் அந்நாட்டில் வழங்கி வரும் பழமொழிகளும் சிறப்பிடம் பெறுகின்றன. பழமொழிகள் மிகுந்திருத்தல், மொழியின் வளத்தையும் செழிப்பையும் உணர்த்துவதாகும். நம் முன்னோர்களின் அறிவார்ந்த அனுபவக் கருத்துக்களின் திரட்சியே, பழமொழிகள் வடிவில் அமைந்து, பின்னோர்களாகிய நமக்குப் பெரும்பயனை விளைப்பனவாக வழங்கி வருகின்றன.

தமிழில் வழங்கி வரும் பழமொழிகளில், "சட்டியில் இருந்தால்தானே அகப்பையில் வரும்" என்பது ஒன்று. மேல் நோக்காகக் காண்பதற்கு இஃது ஏதோ ஒரு சாதாரணமான, சிறப்பில்லாத பழமொழி போல நமக்குத் தோன்றும். இப் பழமொழியைக் கேட்குங்கால், வெறும் சட்டியும் அகப்பையும் மட்டுமே நம் நினைவிற்கு வரும்.

இந்நூற்றாண்டின் முதற்பாதியில் தன்னிகரற்ற சான்றோராக விளங்கித் தமிழையும் சமயத்தையும், தமது சமரச சன்மார்க்கச்சான்றாண்மைச் சொற்பொழிவுகளால் வளர்த்தருளியவர், திருக்கோவலூர் ஆதீனம் திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் மடாலயத்தின் ஐந்தாம் அருட் குரவராகிய சீலத்திரு சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் (1873—1942) அவர்களாவர். அப் பெருந்தகையார் 'சட்டியில் இருந்தால் அகப்பையில் வரும்' என்னும் சாதாரணப் பழமொழிக்குப பின்வருமாறு பொருள் விளக்கம் கூறியருள்வார்.

> "சட்டியில் (சஷ்டியில்), இருந்தால் (விரதம் இருந்து வழிபட்டால்), அகப்பையில் (அகமாகிய வயிற்றின்கண் உள்ள கருப்பையில்), வரும் (மகப்பேறு வாய்க்கும்)"

என்பது, அவர்கள் அவ்வப்போது விளக்கி மகிழ்விக்கும் சிறந்த இனிய பொருளாகும்.

இச்சிறந்த இனிய பொருளை விளக்கி வலியுறுத்தித் தெளிவுறுத்தும் சான்றுகளாக, அவர்கள் பரிபாடல், பெரிய புராணம் என்னும் நூல்களில் இருந்து, சிறப்பாக இரண்டு மேற்கோள்களை, எடுத்துக் காட்டுவதுண்டு. பரிபாடல் என்னும் சங்க நூல்,

"வருபுனல் அணிகென வரங்கொள் வோரும்
கருவயிறு உறுகெனக் கடம்படு வோரும்
செய்பொருள் வாய்க்கெனச் செவிசார்த்து
வோரும்
ஐயமர் அடுகென அருச்சிப் போரும்"

ஆகிய மிகப் பலர், திருப்பரங்குன்றில் முருகனை வழிபடுதலைக் குறிப்பிடுகின்றது.

முருகனை வழிபட்டே, கண்ணப்ப நாயனாரைத் தம் புதல்வராகப் பெற்றெடுக்கும் பெரும்பேறு எய்தினர், அவர்தம் தாய் தந்தையர் ஆகிய நாகனும் தத்தையும்!

"பொருவரும் சிறப்பின் மிக்கார்
இவர்க்கினிப் புதல்வர்ப் பேறே
அரியதென் றெவரும் கூற
அதற்படு காத லாலே
முருகலர் அலங்கற் செவ்வேல்
முருகவேள் முன்றிற் சென்று
பரவுதல் செய்து நாளும்
பராய்க்கடன் நெறியில் நிற்பார்"

எனவரும் பெரிய புராணப் பாடல், இதனை வற்புறுத்தும்.

இதனால் கந்தர் சஷ்டி விரதத்தின் பயனையும், விழாவின் சிறப்பினையும் நாம் அனைவரும் நன்கினிது உணரலாம். செந்தமிழ்க் கடவுளாகிய முருகனுக்குச் சிறந்த இவ்விழா நாட்களில், நாம் அப்பெருமானை அன்புடன் வழிபட்டு நலம் பலவும் அடைவோமாக!

—ஆசிரியர்.



சிவத்திரு. ஞானியார் அடிகள், திருப்பாதிரிப்புலியூர்.

# வள்ளி கணவன்

**முன்னுரை :**

முருகன் தமிழ்க் கடவுள். தமிழக மக்கள் தொன்றுதொட்டு முருகனை விரும்பி வழி பட்டு மகிழ்ந்து வந்துள்ளனர். முருகனின் பெயர்கள் பலவற்றுள். "வள்ளி கணவன்-வள்ளி மணாளன்" என்பதும் ஒன்று. முருகனைப் பற்றிய துதிப் பாடல்களில் நம் முடைய பண்டைத் தமிழ்ச் சான்றோர்கள் பலரும், முருகன் தனது இச்சா சக்தி யாகிய வள்ளியம்மையார்பால் கொண் டிருக்கும் காதலையும் பரிவையும் குறித்துக் கவினுறப் பாடி மகிழ்ந்துள்ளனர். முருகன் வள்ளியம்மையின் பாதங்களைப் பணி கின்றார்; அவள் பால் தணியா அதிமோக தயாபரனாய்த் திகழ்கின்றார்; வேடுவச் சிறுமியாகிய வள்ளியம்மைக்குத் தான் மீளாத வழிஅடிமை எனக் கூறி, அவளுடைய அடியிணைகளைப் பற்றி, வேத மும் அமரரும் சக்கரவாளமும் அறியும்படி, மேரு மலையில் அடிமைச் சாசனம் எழுதிக் கையெழுத்திட்டு அளித்துள்ளார் என் றெல்லாம், அருணகிரிநாதர் வள்ளி யம்மையின்பால் நமது முருகப் பெருமான் கொண்டுள்ள அன்பின் திறனைப் பற்பல வாறு பாடுகின்றார்.

"பணியா என வள்ளி பதம்பணியும்
தணியா அதி மோக தயாபரனே"

"பாலைக் குழல்வள்ளி பதம்பணியும்
வேலைச் சுர பூபதி மேருவையே"

—கந்தர் அநுபூதி

"வேடுவச் சிறுமி ஒருத்திக்கு
யான் வழி அடிமை எனச்செப்பி
வீறுள அடியிணையைப் பற்றி
வேதமும் அமரரும் மெய்ச்சக்கர வாளமும்
அறிய விலைப்பட்டு,
மேருவில் மிகவும் எழுத்திட்ட பெருமாளே"

—திருப்புகழ்

இவ்வாறே சங்கத் தமிழின் தலைமைப் புலவராகிய நக்கீரரும், முருகனது ஆறு திருமுகங்களுள் ஒருமுகம், உலகியலில் இல்லற வாழ்வு இனிது நடத்தற் பொருட்டு, வள்ளி அம்மையாருடன் எப்போதும் புன் முறுவல் பூத்த நிலையில் இனிது உரை யாடி மகிழ்கின்றது எனக் குறிப்பிடு கின்றார்.

"குறவர் மடமகள் கொடிபோல் நுசுப்பின்
மடவரல் வள்ளியொடு நகையமர்ந் தன்றே"

எனவரும் திருமுருகாற்றுப்படை வரிகள் வள்ளியம்மையின் சிறப்பை உணர்த்துதல் காணலாம்.

"தீர்ந்த அன்பாய அன்பர்க்கு
அவரினும் அன்ப போற்றி"

என மணிவாசகர் பாடுதல் போல, அடி யார்கள் தன்னிடம் செய்யும் அன்பைக் காட்டிலும், அடியார்களிடம் இறைவன் மிகுந்த பேரன்பு உடையவனாகத் திகழ் கின்றான்; யாரொருவர் தன்னை இழந்து, யான் எனது என்பது அற்றுத் தன்னையே அடைக்கலம் புகுந்து பணிகின்றனரோ, அவர்கள்பால் இறைவன் பெரிதும் அருள் கூர்ந்து, தானே அவர்களை நாடி வந்து அவர்களுக்குத் தண்ணளிகள் பலவும் செய்து, ஆட்கொள்ளுகின்றான் என்னும் பல அரும் பெறல் உண்மைகளை 'வள்ளி கணவன்' என்னும் தெள்ளு தமிழ்ச் சொற் றொடர் சிறப்புற உணர்த்துகின்றது எனலாம்.

## வள்ளியம்மை வரலாறு :

**நம்பிராசன் :**

தொண்டை நாட்டில் மேற்பாடி என்பது ஒரு சிற்றூர். அதன் அருகே ஒரு மலை உண்டு. அம்மலையின் சூழலில் அதனைச் சார்ந்து வேட்டுவ மக்கள் பலர் வாழ்ந்து

வந்தனர். அவர்களுக்குத் தலைவனாக நம்பி என்பவன் வாழ்ந்திருந்தான். அவனுக்கு மைந்தர்கள் பலர் பிறந்திருந்தனர். ஆயின், பெண் குழந்தை ஒன்று இல்லாமையால், அதனைப்பெற விரும்பி, தன் குல தெய்வமும் குறிஞ்சி நிலக் கடவுளுமாகிய முருகனை நோன்புகள் நோற்று வழிபட்டு வந்தான்.

**சிவ முனிவர் :**

அம்மலைச் சாரலில் சிவமுனிவர் என்னும் சிறந்த முனிவர் ஒருவர் நெடுங்காலமாகத் தவம் புரிந்து வந்தார். ஒருநாள் அவர் முன்னிலையில் ஒரு பெண்மான் ஒன்று இறையருளால் அழகுற வந்து உலாவி நின்றது. சிவ முனிவர் அதனைக் கண்ணுற்றார். அவருக்கு அதன்பால் ஒரு வகை ஈடுபாடும் அன்பும் தோன்றியது. அவருடைய அருட்பார்வை அம் மானின் மீது விழுந்து படிந்தது. அதனால் அம்மான் இறையருட்டிறனால் கருவுற்றது.

**சுந்தரவல்லி :**

முன்னொரு காலத்தில் திருமாலின் கண்களிலிருந்து தோன்றிய அமிர்தவல்லி சுந்தரவல்லி என்னும் பெண்கள் இருவரும் முருகன்பாற் காதல் கொண்டு, அவனையே மணக்க விரும்பித் தவங்கிடந்து வழிபட்டு வந்தனர். அவர்களின் தவத்திற்கு மகிழ்ந்து வெளிப்பட்ட முருகனிடம், தம் இருவரையும் மணம் செய்துகொள்ள வேண்டுமென அவர்கள் பெரிதும் வேண்டி வரம் கேட்டனர். முருகன் அவர்களில் ஒருத்தியாகிய **அமிர்தவல்லியை** விண்ணுலகத்திலும், மற்றொருத்தியாகிய **சுந்தரவல்லியை** மண்ணுலகத்திலும் சென்று பிறந்து வளர்ந்து வரும்படி பணித்தார். அமிர்தவல்லி விண்ணுலகம் சென்று தேவேந்திரனுக்கு மகளாய்ப் பிறந்து தெய்வயானை என்னும் பெயருடன் வளர்ந்து வந்தாள். சுந்தரவல்லி என்பவள் மண்ணுலகில் தொண்டை நாட்டில் மேற்பாடி என்னும் ஊருக்கு அருகிலுள்ள மலைச்சாரலில், சிவமுனிவர் அருள் நோக்கால் கருவுற்ற மானின் வயிற்றில் வந்து, மானிட மகவாய்த் தங்கினாள். அம் மானானது, தான் கருவுற்ற அப்பெண் மகவை, அம்மலைச் சாரலில் வள்ளிக் கிழங்கு அகழ்ந்தஒரு குழியில் கருவுயிர்த்து ஈன்று அகன்றது.

**வள்ளி எனும் பெயர் :**

வேட்டுவர் குலத் தலைவனாகிய நம்பி ராசன் என்பவன், வேட்டையாடிக் கொண்டு அவ்வழியே வந்தபோது, ஈன்று அணிய ஒருசிறு குழந்தையின் அழுகை ஒலிகேட்டு, அவ்வொலி வந்த திசையை நோக்கிச் சென்று தேடிப் பார்த்து அதனைக் கண்டெடுத்தான். பெண் மகவு ஒன்றை விரும்பி நோன்பிருந்து வழிபட்டு வந்த அவன், அக்குழந்தை பெண் குழந்தையாக இருத்தலைக் கண்டு அகம் மிக மகிழ்ந்தான். அதனை எடுத்துச் சென்று தன் மனைவியின்பாற் கொடுத்து வளர்த்து வந்தான். வள்ளிக் கிழங்கின் குழியில் இருந்து கிடைத்ததனால், அக்குழந்தைக்கு வேட்டுவ முதியோர்கள் குறிப்பிட்டபடி, **வள்ளி** என்று பெயர் வைத்தான்.

நாத்தளர்ந்து சோர்ந்து நடுக்கமுற்றுப் பற்கழன்று
மூத்துநரை முதிர்ந்த மூதாளர் வந்தீண்டிப்
பாத்திபடு வள்ளிப் படுகுழியில் வந்திடலால்
வாய்த்த இவள்நாமம் வள்ளியெனக் கூறினரே.

வள்ளியம்மை வளர்ந்து, தினைப்புனம் காத்து வைகிய மலையாதல் பற்றியே, **வள்ளி மலை** என்னும் பெயர் வழங்குவதாயிற்று.

கள்இறைத்திடு பூந்தண்தார்க்
கடம்பணி காளை பன்னாட்
பிள்ளைமைத் தொழில்மேற் கொண்டு,
பெட்புடன் ஒழுகும வண்ணம்,
வள்ளியைத் தன்பால் வைத்து
**வள்ளிவெற்பு** என்னும் நாமம்
உள்ள அக் கிரியின் மேன்மை
உரைத்திடும் அளவிற் றாமோ?

**தினைப்புனம் :**

வேட்டுவர் தலைவனாகிய நம்பி, தனக்குப் பெண் குழந்தை கிடைத்ததனை ஒட்டி, விழாக்கள் பல கொண்டாடி மகிழ்ந்தான். குழந்தையைத் தொட்டிலில் இட்டுத் தாலாட்டிப்பாராட்டிச்சீராட்டி வளர்த்தான். வள்ளியம்மை முறைமுறையே வளர்ந்து பன்னிரண்டு வயது அடைந்தனள். தங்கள் குலமுறைப்படி நம்பிராசன்

அவளைத் தினைப்புனம் காவல் புரியுமாறு அனுப்பி வைத்தான். அங்கே அவள் பரண்மீது இருந்து குருவி ஓப்பியும், கிளி கடிந்தும், மான் மரை மிரளே முதலியன விலக்கியும், தினைப்புனம் காத்து வந்தாள்.

முருக வேடன் :

முன்னே தான் அளித்த வரத்தின்படி, வள்ளியம்மைக்கு அருள்புரிய முருகன் தணிகை மலைக்கு எழுந்தருளி வந்து தங்கியிருந்தான். அப்போது அங்கு வந்த நாரத முனிவர், வள்ளியம்மைக்கு அருள் புரிதற்குத் திருவுளம் பற்றும்படி முருகனை வேண்டிக் கொண்டார். அதற்கு இசைந்து முருகன் மானிட வடிவம் தாங்கிக் கழலும் கச்சும் அணிந்து, வேட்டுவக் கோலம் தாங்கி, வள்ளிமலையின் வளம்மிகு சாரலை அடைந்தார். அங்கே தினைப்புனம் காத்து நின்ற வள்ளியம்மையின்பாற் சென்று, பற்பல காதல் மொழிகள் புகன்றார்.

வேங்கை மரம் :

அதுபோது அங்குத் தன் துணைவருடன் நம்பிராசன் தன் மகளைக் காண வந்தான். உடனே முருகன் வள்ளியின் பரணுக்கு அருகே ஒரு வேங்கை மரமாக நின்றான். நம்பியும்வேடனும்புதியவேங்கை மரத்தைக் கண்டு வியப்புற்றனர். வேட்டுவர் சிலர் அதனை வெட்டி எறிய முற்பட்டனர். ஆனால் நம்பி இது வள்ளிக்குத் துணையாகவும்நிழலாகவும் இருக்கும் எனக்கூறித் தடுத்து விடுத்துச் சென்றான். அவர்கள் சென்றதும் மீண்டும் முருகன் மானிட உருக்கொண்டு, வள்ளியிடம் பல காதல் உரைகள் பேசத் தலைப்பட்டான். அதற்கு,

"இழிகுலம் ஆகிய எயினர் பாவைநான்
முழுதுலகு அருளபுரி முதல்வர் நீர்எனைத்
தழுவுதல் உன்னியே தாழ்ச்சி செப்புதல்
பழியது வேஅலால் பான்மைத்து ஆகுமோ ?"

"இலைமுதிர் ஏனல் காத்திருக்கும் பேதையான்
உலகருள் இறைவர் நீர்உளம் மயங்கிஎன்
கலவியை விரும்புதல் கடனது அன்றரோ
புலியது பசியுறில் புல்லும் துய்க்குமோ ?"

எனப்பல பணிவுரைகள் கூறி மறுத்து, வள்ளியம்மை நாணிநின்றாள்.

அப்பொழுது மீண்டும் அங்கே நம்பி ராசன் தன் துணைவருடன் போந்தான். அது கண்ட வள்ளி, அச்சம் கொண்டு நடுநடுங்கி, முருகனாகிய காளையை நோக்கி, 'வேடுவர்கள் வருகின்றார்கள்; அவர்கள் மிகவும் பொல்லாதவர்கள்; உன்னை இங்குக் கண்டால் ஐயுற்றுத் தீங்கு புரிவார்கள், உடனே தப்பி ஓடிவிடு" என்றாள். இங்ஙனம் அவள் கூறியது கேட்டு, அன்பும் பரிவும் தன்மீது இருத்தலால் அன்றோ, தப்பி ஓடும்படி தனக்குச் சொல்லுகின்றாள் என்று கருதி, முருகன் மிகவும் மகிழ்ந்தான்.

முருக முதுகிழவன் :

உடனே வயது சென்ற ஒரு முதிய கிழவனாகத் தவ வடிவம் கொண்டு, வேடுவனும் நமபியும் வரும் வழியில், முருகன் அவர்களைச் சந்தித்தான். நம்பிக்குத் திருநீறு நல்கினான். "நினக்கு வலிமையும் வளமும் பெருகுக! நினக்கு வெற்றிகள் பல வாய்க்க" என்று வாழ்த்தினான். முதிய கிழவரின் தவவேடம் கணட நம்பியும் வேடுவரும் பணிந்து வணங்கினர். தங்களுககு என்ன வேண்டும்? என நம்பிராசன் வினவினான். அதற்கு முருகன் எனது மூப்பு அகலவும், உள்ளக் கவலை நீங்கவும் இங்கே நுமது மலையிலுள்ள குமரியை (தீர்த்தம்) அடைந்து, இனிது ஆடுதற்காக விரும்பி, மெலிந்து விரைந்து வருகின்றேன் என்று விடையிறுத்தான்.

ஆண்தொழிலின் மேதகையயூஅண்ணல்
இதுகேண்மோ!
நீண்டதனி மூப்பகல நெஞ்சம் மருள்நீங்க
ஈண்டுநும் வரைக்குமரி எய்தி இனிதாட
வேண்டி வருகின்றனன் மெலிந்துகடிது என்றான்

அதுகேட்ட நம்பி, "நல்லது தாங்கள் கூறிய தீர்த்தத்தில் நாள்தோறும் ஆடிக் கொண்டு, தனியாக இருக்கும் எங்கள் புதல்விக்கு ஒரு தனித் துணையாக இங்கேயே இருங்கள்" என்று சொல்லி, அவரை அழைத்துக்கொண்டுவந்து தன் மகளிடம் விடுத்துச் சென்றான்.

காதல் மொழிகள் :

வேடுவரும் தம்பியும் சென்ற பின்னர், தவவேடம் பூண்ட கிழவனாக இருந்த

முருகன், 'யான் மிகவும் பசியால் வருந்துகின்றேன்' என்றான். வள்ளியம்மை தேனும் கனியும் தினைமாவும் கொணர்ந்து கொடுத்தாள். அவற்றை உண்ட முருகனாகிய கிழவன், 'வெய்யில் மிகுதியால் நீர் விடாய் மிகுதியாக இருக்கிறது, என் செய்வது?' என்றான். அது கேட்ட வள்ளி, 'இம் மலையைக் கடந்து சென்றால் ஒரு சுனை உள்ளது. அங்குச் சென்று நீர் அருந்தி வருக' என்றாள். அதற்கு முருகன் "யானோ கிழவன்; நீர் விடாயால் களைத்து மெலிந்துள்ளேன். சுனைக்குச் செல்லும் வழியும் தெரியாது. ஆதலின் நீயே உடன் வந்து சுனையைக் காட்டுக" என்றான். வள்ளியும் அவ்வாறே செய்ய, முருகன் சுனைநீர் பருகி மகிழ்ந்தனர். வள்ளியை நோக்கி, "என் பசியைப் போக்கினாய்; தாகத்தை நீக்கினாய்; ஆயினும், என் தளர்ச்சி நீங்க யான் கொண்ட மோகத்தை நீ தணித்தால் என் குறை தீரும்" என்றான். அதற்கு,

ஆகத்தை வருத்து கின்ற
அரும்பசி அவித்தாய்! தெண்ணீர்த்
தாகத்தை அவித்தாய்! இன்னும்
தவிர்ந்தில தளர்ச்சி மன்னோ!
மேகத்தை அனைய கூந்தல்
மெல்லியல்! வினையேன் கொண்ட
மோகத்தைத் தணித்தி யாயின்
முடிந்ததுஎன் குறைஅது! என்றான்.

**வள்ளியின் இகழ்ந்துரை :**

அது கேட்ட வள்ளியம்மை, "மேலாகிய தவவேடம் பூண்டுள்ளீர்! ஆனால் அதற்குச் சிறிதும் ஏலாத சொல்லும் செயலும் உடையவராக நீர் இருக்கின்றீர்! பார்ப்பதற்குப் பால்போலத் தோன்றி, பருகுபவர்களின் உயிரையும் மாய்க்கும் ஆலாலமென்னும் நஞ்சின் தன்மையையே நீர் கொண்டுள்ளீர்! உமது தலைமுடி சங்குபோல் வெளுத்து நரைத்துள்ளது! ஆயினும் உமக்கு நல்லறிவு சிறிதும் இல்லை. வயது முதிர்ந்தும் என்னை விரும்பி, பித்துக் கொண்டவர்களைப் போலப் பிதற்றுகின்றீர். இந்த வேடர் (வேட்டுவர்கள்; தவவேடம் பூண்டவர்கள்) கூட்டத்துக்கே ஒரு பெரும் பழியை உண்டாக்கி விட்டீர்களே!" என்று சீறிச் சினந்து புலந்து அப்பால் செல்ல முற்பட்டாள்,

நத்துப் புரைமுடியீர்! நல்லுணர்வு சற்றுமிலீர்!
எத்துக்கு மூத்தீர்? இழிகுலத்தேன் தனைவெஃகிப்
பித்துக்கொண் டாற்போற் பிதற்றுவீர்! இவ்வேடர்
கொத்துக்கெல் லாம்ஓர் கொடும்பழியைச்
செய்தீரே

**விநாயகர் :**

கிழவனாகிய முருகன், உடனே தன் தமையனாகிய விநாயகரை நினைத்தான். விநாயகர் ஒரு பெரும் களிறாக, வேகமாகச் செல்லும் வள்ளியின் முன்னே வந்து, பிளிறி முழங்கினார். அது கண்டு வள்ளி அச்சங் கொண்டு நடுங்கி மீண்டு, 'இந்த யானையினிடம் இருந்து என்னைக் காப்பாற்றி யருள்க. நீர் சொல்கிறபடியே நான் செய்கிறேன்' என்று சொல்லிக் கிழவராகிய முருகனை வேண்டினாள். முருகன் விரும்பியபடி யானை மறைந்தது. முருகன் ஆறுமுகங்களும் பன்னிரு கைகளும், வேலும் தாங்கி, மயில்மீது இவர்ந்து வள்ளிக்குக் காட்சி தந்தான். வள்ளியம்மை மிகவும் மகிழ்ந்தாள். முன்பு இன்னார் என்று தெரிந்து கொள்ளாமல் தான் கூறிய இகழ்ச்சி யுரைகளைப் பொறுத்துத் தன்னை ஆட்கொண்டு அருளுமாறு வேண்டிக் கொண்டாள்.

"மின்னே அனையசுடர் வேலவரே! இவ்வுருவம்
முன்னேநீர் காட்டி முயங்காமல், இத்துணையும்
கொன்னே கழித்தீர்! கொடியேன்செய்
குற்றமெலாம்
இன்னே தணித்தே எனைஆண்டு கொள்ளும்
என்றாள்"

**உடன்போக்கு :**

பின்னர், முருகன் வள்ளியை நோக்கி, "நீ முன்னே செல்லுக. யான் பின்னர் வருகின்றேன்" எனக்கூறி, அனுப்பினான். பிறகு சிலநாளில் தினைக்கதிர்கள் முற்றி அரிந்து முடிந்ததனால், வள்ளி தன் தோழிகளுடன் தினைப்புனத்தினின்று நீங்கித் தன் இல்லம் சேர்ந்து வதிந்து வந்தாள். ஒருநாள் நள்ளிரவில், முருகன் அங்குப் போந்து, வள்ளியம்மையைத் தன்னுடன் அழைத்துச் செல்ல முற்பட்டான். வள்ளியின் பாங்கி (தோழி) ஒருத்தி, பிறர் எவரும் அறியாதபடி வள்ளியை நள்ளிர

வில் அழைத்தச் சென்று, முருகனின்பால் ஒப்படைத்தாள்.

தாய்துயில் அறிந்து, தங்கள்
தமர்துயில் அறிந்து, துஞ்சா
நாய்துயில் அறிந்து, மற்றுஅந்
நகர்துயில் அறிந்து, வெய்ய
பேய்துயில் கொள்ளும் யாமப்
பெரும்பொழுது அதனில், பாங்கி
வாய்தலிற் கதவை நீக்கி,
வள்ளியைக் கொடுசென்று உய்த்தாள் !

முருகன் ஆகிய காளையும் வள்ளியும் ஆகிய இருவர் அறியாமல் நள்ளிரவில், தமிழ் அகன் ஐந்திணை நூல்கள் கூறும் களவொழுக்க முறைப்படி உடன் போக்குச் செல்லுதலை, வேடுவர்கள் அறிந்து சினந்து பின் தொடர்ந்து எதிர்த்துப் போர் புரியத் தொடங்கினர். அதுகண்டு பதைபதைப் புற்று அஞ்சிய வள்ளியம்மை அவர்களைப் போரிட்டு அடக்குமாறு முருகனை வேண்டினாள். முருகன் புன்முறுவல் பூத்தான். அவனது கொடியில் இருந்த சேவல் நிமிர்ந்து நின்று ஒருபெரும் குரல் எழுப்பிற்று. அவ்வொலியால் எதிர்க்க வந்த வேட்டுவர் அனைவரும் மயங்கி மாண்டு கீழே வீழ்ந்தனர்.

தன் சுற்றத்தவர்கள் வீழ்ந்துபட்டது கண்ட வள்ளியின் மனம் பின்னர் பெரிதும் வருந்தியது. அது கண்ட முருகன் இறந்த வேட்டுவரை எல்லாம் எழுப்பும்படி வள்ளிக்கு அருள் புரிந்தான். யாவரும் உயிர்பெற்று எழுந்து உண்மை உணர்ந்து, முருகனைத் தொழுது பணிந்தனர்.

அவர்களின் வேண்டுகோட்படி முருகன் அவர்களின் சிற்றூர்க்குச் சென்றான். அங்கே நாரத முனிவர் முறைப்படி எரி யோம்பி வேள்விச் சடங்குகள் புரிய, முருகன் வள்ளியம்மையை மணந்து கொண்டு தணிகை மலைக்குச் சென்று தங்கி, அடியவர்க்கு அருள் புரிந்து வருகின்றான்.

செச்சை மௌலியான் செருத்தணி
வரைமிசை தெய்வத்
தச்சன் முன்னரே இயற்றிய
தனிநகர் புகுந்து
பச்சிளங் கொங்கை வனசரர்
பாவையோடும் ஒன்றி
இச்சகத்து உயிர் யாவையும்
உய்ய வீற்றிருந்தான்.

—கந்தபுராணம்.

## மதிப்புரை.

(1) சீகாழிச் சட்டைநாதர் பதிகம் :

பூம்புகார் மேலையூர்ச் சிவராஜயோக மடம் மறைத்திரு. **மாணிக்கவாசக ஞான தேசிக சுவாமிகள்** அவர்கள் இயற்றியது. சுவாமிகள் அவர்கள் முன்னரே திருஞான சம்பந்தர் கலம்பகம், திருஞான சம்பந்தர் பிள்ளைத்தமிழ், சிதம்பரம் ஸ்ரீசரபர் தோத்திர மாலை, மதுரை ஸ்ரீ அங்கயற்கண்ணி அம்மை மேக விடுதூது முதலிய நூல்களை இயற்றியுள்ளார். இப்பதிகம் சீர்காழியில் விளங்கும் ஸ்ரீ சட்டைநாத சுவாமியின் சிறந்த துதி நூலாக விளங்குகின்றது. ஒவ்வொரு பாடலும், "அமலனே **சட்டைநாதா!** அந்தண் புனற்காழி மைந்தன்தன் அடிபரவும் அடியேனை ஆதரிப்பாய்" என முடிகின்றது. சட்டை நாதரின் திருவுருவ நலம், செயல் இயல் முதலியன அழகுற விளக்கப் பெற்றுள்ளன. **சிவகாமி ஆண்டார், சிறுத்தொண்டர்** என்னும் நாயன்மார்களை இதிற் சுட்டியிருப்பது, சிறப்பும் பொருத்தமும் உடையதாகத் திகழ்கின்றது. சீர்காழியின் க்ஷேத்திர பாலராக, அட்ட பயிரவராக விளங்கும் இவரே, திருப்புத்தூரில் **யோக பயிரவர்,** தில்லையில் **சுவர்ண பயிரவர்** முதலிய பெயர்களுடன் விளங்குதல் முதலிய செய்திகள், குறிப்பிடப் பெற்றிருத்தல் போற்றத் தக்கது. நூலின் இறுதியில் **வீரபத்திரர், அஸ்திர தேவர்** துதிகளாக, இரண்டு சிறந்த பாடல்களும் அமைந்துள்ளன.

—**ஆசிரியர்.**

# வள்ளித் திருமண வரலாற்று நுட்பங்கள்

வள்ளித் திருமண வரலாறு, கந்தபுராணத்தின்கண் வரும் சுவைமிகுந்த சிறந்த பகுதியாகும். கந்தபுரானம் பாடியருளிய கச்சியப்ப சிவாசாரியர், தமிழ் அகப் பொருள் இலக்கணச் சுவைநலம் பலவும் இனிது அமைய, வள்ளியம்மை திருமண வரலாற்றை வளங்கெழுமப் பாடியுள்ளார். வள்ளியம்மையின் திருமண வரலாறு, தொன்றுதொட்டுத் தமிழக மக்களின், சிறப்பாக முருகன் அடியார்கள் அனைவரின், உள்ளங்களையும் கவர்ந்து, தேனும் பாலும் அமுதமுமாய்த் தித்தித்து இன்புறுத்தி வருகின்றது.

"வள்ளிக் கூத்து" (வள்ளித் திருமண நாடகம்) என்பது, 2000-3000 ஆண்டுகளுக்கு மேலாகவே சிறப்புற நிகழ்ந்து வருகின்றது. வள்ளித் திருமணம் பற்றிய நாடகத்தினை எத்தனை முறை காணினும், அவ்வரலாற்றை எத்தனைமுறை கேட்பினும், தமிழ் மக்களின் உள்ளத்தில் சற்றும் ஆர்வக் குறைவு ஏற்படுவதில்லை. அது பற்றியே, ஒல்காப் பெரும் புகழ்த் தொல்காப்பியர் தமது நூலில், இதனை "**வாடா வள்ளி**" எனச் சிறப்புறக் குறிப்பிட்டனர் போலும்!

இத்தகைய பெருஞ் சிறப்பு மிக்க வள்ளித் திருமண வரலாறு, எத்தனையோ பவ தத்துவ நுட்பங்களைத் தன்னுட் பொதிந்து கொண்டிருக்கின்றது. "பெரும்பாலான பொதுமக்களின் எளிய உணர்விற்கு எட்டிப் புலனுகும் வகையில், உயரிய தத்துவ நுட்பங்களைக் கதைகள் அல்லது, புனைகதைகளின் வாயிலாகப் புராணங்கள் அழகும் சுவையும் அமையப் போதிக்கின்றன. கல்வி யறிவற்ற பாமர மக்களுக்குத் தத்துவக் கலையின் கருத்து நுட்பங்களில் ஆவலும் ஆர்வமும் ஏற்படச் செய்யும் கடினமான வேலையினை, இந்தியநாடு எளிதாகச் செய்து முடித்து வெற்றி கண்டுள்ளது".*

இவ்வுண்மையைவலியுறுத்தும்சான்ருக, வள்ளித் திருமண வரலாறு ஒப்புயர் வற்று ஒளிர்கின்றது என, நாம் தயங்காது கூறலாம். இவ்வரலாற்றில் அமைந்து கிடக்கும் தத்துவ நுட்பங்களை, ஈண்டு இயன்ற அளவு ஒருசிறிது காண்போம்:

(1) வள்ளியம்மை முருகனை மணம் புணர்ந்த கதை, ஓர் உயிரானது இறைவனேடு இரண்டறக் கலக்கும் பேற்றைப் பெறும் நிலையினை உணர்த்துகின்றது. எனவே, வள்ளியம்மை உயிர், முருகன் இறைவன், மணம் புணர்தல் இரண்டறக் கலத்தல் எனத் தெளியலாம்.

(2) வள்ளியம்மை 'தழைபுனைந்து தன துணர்வின்றியே உழைவயின் வந்து உதித்தனள்' என்பது, உயிரானது திருவருளினலே மாயா தத்துவங்களாலாகிய உடம்பிற்புகும் எனவும், அவ்வுடம்பிற் புகுந்தபின் உயிர் தன் பழைய உணர்ச்சிகள் நீங்கப்பெறும் எனவும் குறிப்பிக்கின்றது.

(3) வள்ளி மான் வயிற்றில் தோன்றினுள் என்புழி, மான் என்பது மூலப்பிரகிருதியைக் குறிக்கும் பரியாயச் சொல்லாதல் காணலாம்.

---

* "The Puranas contain the truth dressed up in myths and stories, to suit the weak understanding of the majority. The hard task of intersting the multitude in metaphysics is achieved in India".

—**Dr. S. Radhakrishnan**,
Indian Philosophy, p. 26.

(4) அவள் வள்ளிக் குழியில் கிடந்தாள் என்பது, தூலசரீர கர்ப்பம் அல்லது 'காரிட்ட ஆணவக் கருவறை' என்பதன் கண் உயிர்தங்கிக் கிடக்கும் நிலையைக் குறிக்கும்.

(5) ஏனைய வேடர்களாகிய பரிசனங்கள் சூழப்போந்த வேடர் குலத்தலைவனாகிய நம்பிராசன், வள்ளியினைக் கண்டெடுத்துச் சென்று மனைவியிடம் கொடுத்துத் தன் வீட்டில் வளர்த்தான் என்புழி, பரிசனங்களாகிய வேடர்கள் கன்மேந்திரிய ஞானேந்திரியங்களையும், நம்பி ராசனின் வீடு உலகத்தையும், அவனது மனைவி திரோதான சத்தியையும் குறிப்பதாகக் கொள்ளலாம்.

(6) திருமாலின் மகளாகிய சுந்தர வல்லி, நம்பிராசனின் மகளாய், வள்ளி என்ற பெயருடன் வேட்டுவச் சிறுகுடியிற் சேர்ந்தாள்.

"முல்லைப் புறவ முதல்வன் திருமடந்தை
கொல்லைக் குறிஞ்சிக் கிழவன் மகளாகிச்
சில்லைப்புன் கூரைச் சிறுகுடியில் சேர்ந்தனளால்
தொல்லைத் தனித்தந்தை தோன்றியமர் வுற்றது
போல்"

என்றது, ஆன்மா எய்தும் கேவல சகல நிலைகளை ஒருவகையிற் குறித்ததாகக் கொள்ளப்படும்.

(7) அம்மை சிறு குழவியாய்ச் சின்னுள் தொட்டில் வாழ்க்கையளாய்க் கிடந்தமை, உயிரானது அறிவு விளக்கம் சிறிதுமின்றி உலகாயதம் முதலிய புறப்புறச் சமயங்களில் உழலும் தன்மையை உணர்த்துவதாகும்.

(8) அம்மை வேடர்களின் சூழலில் வளர்ந்து வந்தமை, 'ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனை' எனவும், 'மன்னவன் தன் மகன் வேடர் இடத்தே தங்கி வளர்ந்தவனை அறியாது மயங்கி நிற்ப' எனவும், முறையே வரும் சிவஞானபோதம் சிவஞானசித்தியார் பகுதிகளை நினைப்பிக்கின்றது.

(9) அம்மை பின்னர்ச் சிறிது வளர்ந்து சிற்றில் இழைத்தும் சிறுசோறு அமைத்தும் விளையாடியமை, உயிரானது புறச் சமய நெறிகளில் ஈடுபட்டு உழலுதலை உணர்த்தும்.

(10) பேதைப் பருவம் பெதும்பைப் பருவங்களை அம்மை எய்துதல், உயிரானது அகப்புறச் சமயத்தும் அகச் சமயத்தும் சார்ந்து வருதலைக் குறிப்பதாகக் கொள்ளப்படும்.

(11) அம்மையார் பன்னிரண்டாம் அகவை நிரம்புதல், உயிரானது சித்தாந்த சைவச் செந்நெறியைத் தலைப்பட்டு அவ் வாழ்க்கையினைத் தொடங்குதலை உணர்த்தும்.

(12) காட்டில் எளிதாகத் தற்செயலிற் கிடைத்த ஓர் உயர்ந்த ஒளிமணியைப் பறவை ஒன்று எடுத்துச் சென்று, தன் கூட்டிலுள்ள இருளை ஓட்டுவதற்கு வைத்தாற்போல, தெய்வநலஞ் சான்ற வள்ளி யம்மையை வேடர்கள் தினைப்புனம் காக்க வைத்தார்கள்.

"காட்டில் எளிதுற்ற கடவுள் மணியைக்
கொணர்ந்து
கூட்டில் இருளோட்டக் குருகுய்த்த வாறன்றே
தீட்டுசுடர் வேற்குமரன் தேவியாம் தெள்ளமுதைப்
பூட்டுகலைக் கையார் புனங்காப்ப வைத்ததுவே"

என்றபடி, அம்மை தினைப்புனம் காக்க முற்பட்டமை, உயிரானது பலவகைப் பசு புண்ணியங்களைச் செய்ய முயலுதலைக் குறிக்கும்.

(13) நாரதர் வள்ளியம்மையைக் கண்டு முருகனுக்குச் சென்று கூறுதலும், வள்ளியை மணம்புரிந்து அருள் செய்க என அவரை வேண்டுதலும், ஆதிசத்தி மலத்தைப் பக்குவப்படுத்தி உயிர்க்கு மல பரிபாக நிலையை முறையே வருவித்தலைத் தெரிவிக்கும்.

(14) முருகன் வள்ளியை மணம்புணர வருதல், ஞானசிரியன் தனக்கினிய மாணவனை நோக்கித் தலைப்பட வருதலாகும்.

(15) வள்ளியும் முருகனும் உரையாடுங்கால் வேடர்கள் வருதல், ஞானசிரியனைக் கண்டதனால் நன்னெறி தலைப்படப் புகும் உயிரை, 'ஆறுகோடி மாயா சக்திகள்

வேறுவேறு தம் மாயைகள் தொடங்கி' அலைக்க முயலுதல் போல்வதாகும்.

(16) முருகன் வள்ளியின்பாற் பல காதல் மொழிகள் பேசுதல், ஞானசிரியன் முதற்கண் செய்யும் வாசக தீக்கையைக் குறிப்பதாகும்.

(17) முருகன் வள்ளியின் காதலைப்பெற இரப்புரைகள் பல மொழிவது, ஒரு நன் மாணவனைப் பெறுதலில் ஞானசிரிய னுக்குஉள்ள அளவிலா ஆர்வத்தினை யுணர்த்துகின்றது.

"மொழியொன்று புகலாயாயின்
முறுவலும் புரியாயாயின்
விழியொன்று நோக்கா யாயின்
விரகமிக் குழல்வேன் உய்யும்
வழியொன்று காட்டா யாயின்
மனமும்சற்றுருகா யாயின்
பழியொன்று நின்பாற் சூழும்
பராமுகம் தவிர்தி"

என்று அம்மையின்பால் முருகன் வேண்டு தல் போலவே, ஞானசிரியனும் தன் இனிய மாணவனுக்குப் பரிவுரைகள் கூறிப் 'பரா முகம் தவிர்தி' எனஞானவுரை பகர்ந்தருள் கின்றான்.

'பராமுகம் தவிர்தி' என்னும் ஞானோபதேசம், மாணவனுக்கு 'ஒரு நெறிய மனம் வைத்துணர்' 'இரண்டுற மனம் வை யேல்' 'வைத்த உள்ளம் மாற்ற வேண்டா' 'ஒன்றியிருந்து நினைமின்கள் உந்தமக்கு ஊனமில்லை' என்பனபோல வரும் திரு மொழிகளின் பொருளை அறிவுறுத்துவ தாகும்.

(18) இனி, வேடர்கள் வருங்கால் முரு கன் வேங்கை மரமாகத் தினைப்புனத்தில் நின்றான் என்பது, ஐம்பொறிகள் தன்னை நிலைகலக்க முயலும்போது, உயிர் தனது வேதாகம சாத்திர நூலறிவால் மனத்தை ஒருவழிப்படுத்தி, நிலையின் நீங்கப்பெறாது உறுதியாக இருக்க முயலுதலைப் புலப் படுத்தும். அடிப்பகுதி வேதங்களாகவும், நடுப்பகுதி சிவாகமங்களாகவும், கிளைகள் பலவும் வெவ்வேறு கலைகளாகவும அமைய, முருகன் வேங்கை மரமாகி நின்றான் எனக் கூறி,

"ஆங்கது காலை தன்னில்
அடிமுதல் மறைக ளாக
ஓங்கிய நடுவண் எல்லாம்
உயர்சிவ நூல தாகப்
பாங்கமர் கவடு முற்றும்
பல்கலை யாகத் தானோர்
வேங்கையின் உருவ மாகி
வேற்படை வீரன் நின்றான்"

என்னும் பாடலால் கச்சியப்பரும் இக் குறிப்பை விளக்கி யருளி இருத்தல், அறிந் தின்புறற் பால தொன்றாகும்.

(19) இனி, முருகன் அம்மையை நோக் கிப் பலவகை விருப்புரைகள் நிகழ்த்த, அம்மை 'இழிகுலமாகிய எயினர் பாவை நான்' எனத் தம்மைக் கூறிக் கொள்ளு தல், கட்டு நிலையில் உயிர் தன்னைத் தானே அறிந்து கொள்ளாது அறியாமை வயப்பட்டு இருத்தலை விளக்குவதாகும்.

(20) அதுபோது வேடர்கள் மீண்டும் வருதலைக் கண்டு முருகன் 'நாடு புகழ் சைவ நற்றவ விருத்தவேடம்' கொள்ளு தல், உயிர் புலன்களை அடக்கித் தூயதவ நன்னெறியே சேர்வதற்கு ஞானசிரியன் முயலுதலைக் காட்டும்.

(21) அந்நிலையில் முருகன் குறவர் செம்மலுக்குத் திருநீறு நல்குதல், சிவதீக் கையிற் செய்யப்படும் முதற்செயலை உணர்த்தும்.

(22) பின்னர் அம்மை முருகனாகிய முதியவர்க்குத் தேனோடு கனியும் மாவும் செங்கையாற் கொடுத்தல், ஞானசிரிய னுக்கு மாணவன் தன் உடல் பொருள் உயிர்களை ஒப்புவித்து 'ஆத்தும நிவே தனம்' செய்ய முற்படுவதைக் குறிக்கும்.

(23) அதுகாலை, முருகன் வள்ளியை நோக்கி, 'ஆகத்தைவருத்துகின்ற அரும் பசி தவிர்த்தாய்! தெண்ணீர்த் தாகத்தை அவித்தாய்! மேகத்தை அனைய கூந்தல் மெல்லியல், வினையேன் கொண்ட மோகத் தைத் தணித்தியாயின் முடிந்தது என் குறை' என்று கூறுதல், 'ஏகபோகமாய் நீயும் நானுமாய்' என்றபடி இறைவன் உயிரோடு இரண்டறக் கலந்து நிற்க விரும்பும் பேரருள் நிலையைப் புலப்படுத்து கின்றது.

(24) அம்மை அதனைக் கேட்டு, முதிய வராக வந்த முருகனைக் கடிந்து சினந்து பழித்துப் பேசுதல், ஆன்மா தன்னையும் தலைவனையும் அறியாது உலகியலில் உழலுதலைக் குறிக்கின்றது; "போதம் மேலாகப் பண்டே புல்லியே மலநோய் தீர்ந்தும்" வாசனை மலத்தினால் உயிர் தாக்குறுதலை உணர்த்துகின்றது எனக் கொள்ளினுமாம்.

(25) முருகன் விநாயகக் கடவுளைத் துதித்து யானையாக வரச் செய்தல், தற்போத முனைப்புக்கெட ஞானாசிரியன் உயிருக்குப் பிரணவ மந்திரோபதேசம் செய்தலாகும். பிரணவ மந்திர உபதேசம் செய்ய உயிர்க்குத் தற்போதம் அடங்கும். அப்பொழுது உயிர் எல்லாம் திருவருளின் செயலே தன்செயலன்று எனத் தெளிந்து கொள்ளும். தெளிந்தால் உயிர் கடவுளை முன்னிட்டுத்தான் அவரில் அடங்கும். இக்கருத்தையே,

"அன்ன தொருகாலை அறுமா முகக்கடவுள்
முன்னொருசார் வந்து முதுகளிற்றின் கோடொற்றப்
பின்னொருசார் வந்து பிடியின் மருப்பூன்ற
இங்நடுவே நின்றான் எறுழ்வயிரத் தூணேபோல்"

என்னும் பாடலால் கச்சியப்பர் குறிப்பிட்டு ஒருவகையில் விளக்குதல் காணலாம்.

(26) பின்னர் அம்மைக்கு முருகன் காட்சி தருதல், உயிர் எய்தப் பெறும் 'சிவதரிசன' நிலையை விளக்கும். ஆண்டு அம்மைக்குத் தோழியாகக் கூறப்படுபவள், இறைவனின் திருவருளேயாம். முருகன் தோழியை இசைவித்தமை, விசேட தீக்கை எனலாம்.

(27) வள்ளியம்மை மீண்டும் தினைப் புனம் காக்கப் போதல், எஞ்சிநின்ற வினையின் பயனை உயிர் துய்த்தொழித்தலைக் குறிக்கும்.

(28) வேடர்கள் வள்ளியை மீட்க முயல்வது, பொறி புலன்களின் இறுதி மயக்க முயற்சியை உணர்த்தும்.

(29) சேவல் கூவுதல், 'அஞ்சல் ஓம்புமதி' என இறைவன் உயிர்க்கு அருளிச் செய்தலைப் புலப்படுத்தும்.

(30) வேடர்கள் மயங்கி விழுதல், உயிரின் மலபந்தங்கள் அற்றொழிதலைக் குறிப்பிக்கும்.

(31) அங்கு நாரதர் வருதல், அதி தீவிர சத்திநிபாதம் பதிதல் ஆகும்.

(32) முருகன் அருளால் அம்மை வேடர்களை மீட்டும் எழுப்புவித்தல், உயிர் தன் பசுகரணங்கள் சிவகரணங்களாக மாறப் பெறுதலைக் காட்டும்.

(33) முருகன் வள்ளியை முறைப்படி மணம்புணர்தல், இறைவன் எளிவந்து உயிர்களை வலிந்து ஆட்கொள்ளும் அருட்டிறனை அறிவிக்கின்றது.

(34) வள்ளியம்மை முருகனை மணந்து இயைந்து நிற்றல், உயிர் மலங்கள் ஒழிந்த நிலையில் இறையருளின்பிற் கலந்தொன்றித் திளைக்கும் சித்தாந்த முத்தி நிலையைக் குறிப்பதாகும்.

(35) வள்ளியம்மையை மணந்து முருகன் தணிகை மலையைச் சார்தல், ஆருயிர்களை ஆட்கொள்ளப் 'புறம்புறமே திரிந்து' இறைவன் தன் கருணை வெள்ளத்து அலைதலையும்; ஆருயிர்களை ஆட்கொண்டு "சேதன லாபம்" பெற்ற பின்னர் இறைவன் "துயர்அறு சுடர்அடி" உடையனாய் ஆறுதலுற்று மனமகிழ்ந்து நிற்றலையும் சுட்டும்.

(37) 'பணியாது? என வினவி வள்ளி பதம் பணியும் தணியா அதிமோகதயாபரனாய்' முருகன் விளங்குதல், இறைவன் அடியார்களுக்கு எளியனும் தன்மையனாய்; அவர்கள் தன்பாற் செய்யும் அன்பினும், தான் அவர்கள்பால் மிக்க பேரன்புடையவனாய்; தன்னைச் சேர்தற்கு அவர்கள் கொள்ளும் ஆர்வத்தினும், தான் அவர்களைச் சேர்தற்கு மிகவும் விதுவிதுத்துத் துடிக்கும் இயல்புடையனாய் விளங்குதலை இனிதுபுலப்படுத்துவதாகும்.

—ஆசிரியர்.

# வள்ளியம்மை வரலாற்றுண்மை

களவுநெறி கற்புநெறி என்றிரண்டு காதல்
உளநெறியும் மக்கட் குணர்த்த,—இளமுருகன்
வள்ளிதெய்வ யானை மணம்புணர்ந்தான்; இச்சைதொழில்
கொள் சத்தி என்றும்; அவர்க் கூறு. (1)

ஐம்புல வேடரிடை ஆழ்ந்துழலும் ஆருயிரை
எம்பெருமான் ஆட்கொண் டினிதருளும்—செம்பொருளே
வள்ளித் திருமணமாம் மாண்பார் வரலாறென்
றுள்ளியுணர்ந் துய்க உவந்து. (2)

அடியார்க் கெளியனும் தன்மை அதனைப்
படியார்க் குணர்த்தும் படிக்கே—கொடி ஆர்க்கும்
மெல்லிடைநல் வள்ளியின்பால் மிக்க விநோதமெலாம்
பல்வகையிற் செய்தான் பரன். (3)

தீர்ந்தஅன்பின் மிக்க சிறந்தஅன்பர் பால்தானும்
நேர்ந்துமிகப் பேரன்பன் ஆம்நிலையை—ஓர்ந்துநாம்
உய்தற் பொருட்டே உயர்முருகன் வள்ளியின்பால்
செய்தான்பல் காதல் திறம். (4)

அன்பின் மிகும்அடியார் தன்னை அடைவதற்கு
நன்று முயலும் நலத்திலும், தான்—சென்றவரை
எய்தத் துடிப்பன் இறைவன்எனல், வள்ளிசெவ்வேள்
மெய்வரலாற் றுல்விளங்கும் மிக்கு. (5)

—ஆசிரியர்.

# சொல் நலன்

அருண்மொழியரசு
திருமுருக கிருபானந்தவாரியார் சுவாமிகள்.

"பேசப்போனையோ? சாகப்போனையோ?" என்பது பழமொழி. பேசுவதுதான் எல்லாவற்றிலும் கடினமானது. மரணத்தை அதற்கு உவமையாகச் சொல்வதால், பேசுவதின் அருமை தெற்றெனத் தெரிகின்றதல்லவா?

உயிர்களை யெல்லாம் இருவகையாகப் பிரித்தார்கள். ஒன்று உயர்திணை; மற்ருென்று அஃறிணை. அஃறிணை என்ருல் உயர்வு அல்லாத திணையென்று பொருள். உயர்வு தாழ்வு என்று கூறுதல் வேண்டும். தாழ்ந்தவர்களைத் தாழ்ந்தவர்கள் என்ருல் அவர்கள் மனம் நோகும். ஆதலால் அல்லாத திணை என்ருர்கள். "கற்றவர் விழுங்கும் கற்பகக்கனி.... மற்றவர் அறியா மாணிக்க மலை" என்ருர். கல்லாதவர்களைக் கல்லாதவர் என்று பேசுதல் கூடாது.

அதுபோல் உயர்திணை அஃறிணை என்று, உயிர்களை இரு பிரிவாக்கி இலக்கண நூல் கூறும்; அதன் அருமையை உன்னுக. உயர்திணை அஃறிணை என்ற இரு பகுதியின் பாகுபாடு யாது? வாய் திறந்து பேசுகின்ற உயிர்கள் உயர்திணை; வாய் பேசாத உயிர்கள் அஃறிணை. எனவே உயர்வு, வாய்மலர்ந்து பேசுவதனுலேயே அமைகின்றது.

இனி அந்தப் பேச்சு எப்படி அமைய வேண்டும் என்பதைச் சிந்தித்து முடிவு கட்டுவதே இக் கட்டுரையின் நோக்கம்.

பேச்சுக்கு எட்டு அங்கங்கள் உண்டு; அஷ்டாங்க யோகம் என்றும், அஷ்ட புஷ்பம் என்றும் கூறுவதுபோல், பேச்சும் எட்டுவித உறுப்புக்களை யுடையது.

பேச்சுக்கு உண்மை, நன்மை, அன்பு, நிதானம், இனிமை, ஆழம், சமயமறிதல், சபையறிதல் என்ற இந்த எட்டுத் தன்மைகள் அமைதல் வேண்டும்.

(1) உண்மையே பேசுக.
(2) நன்மையே பேசுக.
(3) அன்பாகப் பேசுக.
(4) நிதானமாகப் பேசுக.
(5) இனிமையாகப் பேசுக.
(6) ஆழமுடையதாகச்சிந்தித்துப்பேசுக.
(7) சமயம் அறிந்து பேசுக.
(8) சபை யறிந்து பேசுக.

பேசுவதெல்லாம் பேச்சாகாது! பேச்சு ஒரு சிறந்த கலை.

> "விரைந்து தொழில்கேட்கும் ஞாலம்; நிரந்தினிது
> சொல்லுதல் வல்லார்ப் பெறின்"

என்ற திருவள்ளுவர் திருவாக்கால் அறிக.

சொற் செல்வம் என்றும் இதற்குப் பெயர். சொல்லின் செல்வராக விளங்கினர் அநுமந்தர். சொல்லுக்கு உள்ள ஆற்றல் வில்லுக்கும் கிடையாது. அதனுல் தான் திருவள்ளுவர்

> "வில்லே ருழவர் பகைகொளினும், கொள்ளற்க
> சொல்லே ருழவர் பகை"

என்கின்ருர்.

காற்றிலும் கடிய வேகமுடையது சொல். அதனால் கம்பநாடர் "சொல்லொக்கும் கடிய வேகச் சுடுசரம்" என்கின்றார்.

நாம் கடிதங்கள் எழுதும்போது நலம் என்று எழுதுகின்றோம். அவ்விடம் நலங்களை எழுதுங்கள் என்றும் எழுதுகின்றோம். நலமறிய விரும்புகின்றோம். நலங்கள் பல; மனை நலம், மக்கள் நலம், தன் நலம், மன நலம், இன நலம், பிணியிலா நலம், நில நலம், உணவு நலம் என இப்படிப் பல நலன்கள் உண்டு. அவற்றுள் தலையாய நலம் நா நலம்.

"நாநலம் என்னும் நலனுடைமை அந்நலம்
யாநலத் துள்ளதூஉ மன்று"

என்பது பொய்யாமொழி.

எந்நலத்திினும் உயர்ந்தது சொன்னலம். இச் சொன்னலம் பன்னலமும் பயக்கும். சொல்லிலே இறைவன் உறைகின்றான். "இறைவன் எங்கே யிருக்கிறான்?" என்ற இரணியன் வினாவுக்குப் பிரகலாதர், "சொல்லினும் உளன்" என்று விடை பகர்ந்தார்.

சொல்லானது நலங்களின் கருவூலம் என உணர்க. இனி இந்தச் சொல்லின் உறுப்புக்கள் எட்டு என்று முன்னே கண்டோம் அல்லவா? அதனைப் பற்றி நினைவு செய்தல் வேண்டும். முதலாவதாக:—

(1) சொல் உண்மையுடன் கூடியதாக இருக்க வேண்டும். வேதம் தொடங்கும் போதே "சத்யம் வத" என்று கூறுகின்றது. சத்தியத்தைப் பேசு என்பது இதன் பொருள்- சத்தியமே நித்தியம். கடவுள் சத்திய வடிவினர். சத்திய உபாசனை புரிபவர் நித்திய வாழ்வு பெறுபவர்.

"பொய்வளரு நெஞ்சினர்கள் காணாத காட்சியே
பொய்யிலா மெய்யர் அறிவில்
போதபரிபூரண அகண்டிதா காரமாய்ப்
போக்கு வரவற்ற பொருளே"

என்கின்றார் தாயுமானார்.

பயிருக்கு முள் வேலி, உயிருக்கு உண்மை வேலி. சத்தியத்தால் உயர்ந்தவன் அரிச்சந்திரன். சத்தியத்திற்காகத் தயரதர் தன் உயிரையே தியாகஞ் செய்துவிட்டார். காணாத முடியைக் கண்டேன் என்று பொய்யுரை புகன்ற பிரமதேவருக்கு ஆலயம் இல்லாத குறைவு ஏற்பட்டது. பொய்க் கரி புகன்ற தாழை சிவபூசைக்குப் பயன் பெறுதொழிந்தது. ஆகவே உண்மையே உரைக்க.

(2) நன்மையே பேசுக. உண்மை பேசினால் மட்டும் சிறப்பில்லை. உண்மையில் நன்மை கலந்திருக்க வேண்டும். நன்மை விரவாத உண்மை உயர்வு பெறாது.

ஒருவன் கோயிலில் ஜபம் புரிந்து கொண்டிருக்கின்றான். ஒரு பெண்மணி வழிபாட்டுக்கு வந்தாள். ஒரு குடியன் குண்டாந்தடி எடுத்துக்கொண்டு அவளைப் புடைக்கும் பொருட்டு வந்து, "ஐயா இங்கே வந்த பெண் எங்கே?" என்று வினாவினான். இங்கே உண்மை பேசினால் அந்த மங்கை அடிபட்டுத் துன்புறுவாள். ஆதலால் இங்கே உண்மைக்கு உயர்வில்லை. நன்மையாகப் பேசுதல் வேண்டும். இம்சை விளைக்கும் உண்மை, நன்மையாகாது.

"வாய்மை எனப்படுவ தியாதெனில் யாதொன்றும்
தீமை யிலாத சொலல்"

என்கின்றார் திருவள்ளுவர்.

(3) அன்புடன் பேசுக. அன்பு கலவாத, இனிமையோ, கனிவோ இல்லாத பேச்சு நன்மையாகாது.

"இன்சொலால் ஈரம் அளைஇப் படிறிலவாஞ்
செம்பொருள் கண்டார் வாய்ச்சொல்"

யாரிடமும் அன்பு கலந்து பேசுதல் வேண்டும். அன்புடைய பேச்சு செவியைக் குளிர்விக்கும், சிந்தையைக் குளிர்விக்கும். ஊன், உள்ளம், உணர்வு உயிர் எல்லாவற்றையும் குளிர்விக்கும்.

மலருக்கு மணம் இன்றியமையாதது போல், வாழ்வுக்கு ஒழுக்கம் இன்றியமையாதது போல், பேச்சுக்கும் அன்பு இன்றியமையாதது. ஆகவே பகைவனிடத்தும் அன்பாகப் பேசுதல் வேண்டும். முதல்நாள் போரில் ஸ்ரீராமர் இராவணனிடம் பேசிய

பேச்சு இன்றும் உன்னுந்தோறும் உள்ளத்தை உருக்குகின்றது அல்லவா !

ஆனையா உனக் கமைந்தன மாருதல் அறைந்த
பூனை யாயின கண்டனை இன்றுபோய்ப் போர்க்கு
நாளை வாவென நல்கினன் நாகிளங் கமுகின்
வாளை தாவுறு கோசல நாடுடை வள்ளல்.

(4) நிதானமாகப் பேச வேண்டும். வெடு வெடு என்றும், வேகமாகவும் விமான வேகத்திலும் பேசுதல் கூடாது. பேச்சில் அமைதி இருக்க வேண்டும். உணவு உண்ணும்போது அவசரம் அவசரமாக விழுங்கக் கூடாது. இறைவனுக்கு மலர் வேகமாக அர்ச்சிக்கக் கூடாது. அது போல் மெல்ல நிதானமாகப் பேசிக் கேட் டார்ப் பிணிக்குந் தகையவாய், கேளாரும் வேட்ப மொழிதல் வேண்டும். இப்படிப் பேசும் பெருமையுடையவர் தருமர் என உணர்க.

இதனை நாவடக்கம் என்பர் திரு வள்ளுவர்.

எல்லாம் உணர்ந்தும் வியாதன் இயம்பியஅச்
சொல்லாலே நாவயர்ந்தான் சோமேசா—
வல்லமையால்
யாகாவா ராயினும் நாகாக்க காவாக்கால்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு.

—சோமேசர் முதுமொழி வெண்பா.

அடக்கமின்றிப் பேசிக் கெட்டவர் பலர். யாராலே கெட்டான் என்றால் நோராலே கெட்டான் என்று தெலுங்கிலே ஒரு பழ மொழி.

இராசசூயம் என்ற வேள்வி முற்றியபின் துரியோதனன் தனது துணைவர்களுடன் தருமருடைய அழகிய சபா மண்டபத்துக்கு வந்தான். குளமில்லாத இடத்தைக் குளம் என்றும், குளமுள்ள இடத்தைக் குளமில் லாத இடமென்றும் கருதி, ஆடையைத் தூக்கியும் குளத்தில் வீழ்ந்தும் இடர்ப் பட்டான். அப்போது திரௌபதி தந்தைக்குத் தான் விழி யில்லையே ? இவனுக்கும் விழியில்லையோ ? என்று அவையில் நாவடக்கமின்றிச் சொன்னாள். அதன் விளைவுதான் பாரதத்தில் திரௌ பதியும் பாண்டவரும் இடர்ப்பட்டது. ஆகவே சொல்லை அளந்து பேசவேண்டும். பிறர் மனம் நோகுமாறு படபடப்பாகப் பேசுதல் ஒருபோதும் கூடாது.

(5) இனிமையாகப் பேசுக. பேச்சுக்கு உயிர்நாடி இனிமை. இனியவை கூறல் என்ற ஒரு அதிகாரமே வகுத்தார் திரு வள்ளுவர். பணிவும் இன்சொல்லுமே ஒருவனுக்குச் சிறந்த ஆபரணம். இவை யன்றி வேறு அணிகலன்கள் இல்லை என்றார்.

பணிவுடையன் இன்சொலன் ஆதல் ஒருவற்கு
அணி; அல்ல மற்றுப் பிற.

பாண்டவர்கள் மகாப் பிரஸ்தானம் என்ற ஒரு விரதத்தை மேற்கொண்டு சொர்க்கம் போகின்ற போது பீமன் கீழே விழுந்து மாண்டுவிட்டான். ஏன் அவன் விழுந்தான் ? என்று ஜனமேஜயன் கேட் டான். இன்சொல் இல்லாத ஒரே குற்றத் தினால் பீமன் விழுந்து விட்டான் என்றார் வைசம்பாயனர்.

உலகத்தை எல்லாம் வசப்படுத்தும் உபாயம் இன்சொல் என்று கண்ணபிரான் கூறுகின்றார்.

(6) ஆழமுடையதாகச் சிந்தித்துப் பேசுக. பேச்சில் ஆழம் இருக்க வேண்டும். அது சிந்தித்துப் பேசும் பேச்சில் சித்திக் கும். சகுந்தலை தன் மகனுடன் துஷ்யந் தனுடைய அரசவைக்குச் சென்றாள். துஷ்யந்தன், “பெண்ணே நீ யார் ? உன் கணவன் யார் ? இம் மைந்தன் யாவன் ? இங்கு ஏன் வந்தாய் ?” என்றெல்லாம் வினவினான். இத்தனை வினாக்களுக்கும் ஆழமாகவும் அழகாகவும் சிந்தித்தும் சகுந்தலை சொன்ன விடை:

“மகனே பரதா ! உன் தந்தையை வணங்கு” என்றாள். மன்னவன் வினவிய வினாக்கள் அத்தனைக்கும் இதில் விடை யிருப்பதை ஆழ்ந்து சிந்திக்க.

(7) சமயமறிந்து பேசுக, சமய சந்தர்ப்பம் அறிந்து பேசுவது நமக்கு மிகுந்த நன்மைகளைக் கொடுக்கும். ஒருவன் மகிழ்ச்சியாக இருக்கும் போதும், நமது தயவை நாடும்போதும் பேசிப் பயன்

பெற வேண்டும். ஒரு புலவர் அம்பிகை யிடம் கூறுகின்றார் :—

"தேவீ! நான் பாவி. அநேக பாவங் கள் செய்துவிட்டேன். அப்பா என்மீது கோபிப்பார். நீ நல்ல தருணம் பார்த்துக் கூறி, என் குறைகளை மன்னிக்குமாறு செய்'' என்று பாடுகின்றார்.

ஆய்முத்துப் பந்தரின் மெல்லணை மீதுன் அருகிருந்து
நீமுத்தந்தாவென் றவர்கொஞ்சும் வேளையில் நித்தநித்தம்
வேய்முத்தரோடென் குறைகளெல்லாம் மெல்லமெல்லச் சொன்னால்
வாய்முத்தம் சிந்திவிடுமோ நெல்வேலி வடிவன்னையே.

தலைவனிடம் சமயமறிந்து குறைகளைக் கூறிப் பணியாளர் நலம்பெற வேண்டும். மனைவி கணவனிடம் நேரம் அறிந்து கூறி குறை நீக்கி நிறைவு பெற வேண்டும். குழம்பு—ரசம் பக்குவத்தில் தாளிதம் புரி வது போல், நேரம் அறிந்து பேசுவோர் சாரம் பெறுவர்.

(8) அவையறிந்து பேசுக. கூடியுள்ள சபையில் இருக்கும் மக்களின் மன நிலையினை அறிந்து. அதற்கேற்பப் பேசுதல் வேண்டும்.

அவையறிந்து ஆராய்ந்து சொல்லுக சொல்லின்
தொகையறிந்த தூய்மை யவர்.

என்பார் திருவள்ளுவர்.

அவையறிந்து கூறும் திறம் விரிவுரை யாளர்கட்கு மிகமிக இன்றியமையாதது. எவை யறிந்தாலும் அவையறிதல் வேண்டும். அவையறியாது பேசும் பேச்சு நோயறியாது கொடுக்கும் மருந்து போல் தீமை பயக்கும். ஆதலால் அவையறிந்து பயனுடைய சொற்களால் விளக்கமாவும் சுருக்கமாகவும் உருக்கமாகவும் பேச வேண்டும்.

எனவே, உண்மையாகவும், நன்மை யாகவும் அன்பாகவும், நிதானமாகவும், இனிமையாகவும், ஆழமாகவும், சமய மறிந்தும், சபையறிந்தும் பேசுக. முடிவில் பேசாமல் இருந்தும் பழக வேண்டும்.

"ஆசா நிகளம் துகள் ஆயினபின்
பேசா அநுபூதி பிறந்ததுவே"

—கந்தர் அநுபூதி.

---

## மதிப்புரை

**(3) சேக்கிழார் நாயனார் புராணம் :**

ஸ்ரீ உமாபதி சிவாசாரிய சுவாமிகள் அவர்கள் பாடிய சேக்கிழார் புராணத்தின் மூலமும், அதற்குக் குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனம் **ஸ்ரீ ஆறுமுகத் தம்பிரான் சுவாமிகள்** அவர்கள் எழுதிய பழைய உரையும் சேர்ந்தது இந்நூல். பண்டிதர் மு. கந்தையா, பி.ஏ., அவர்கள் எழுதிய குறிப்புரையும், தொகுத்த அருஞ்சொற் பொருள் அகராதியும், இதன்கண் சேர்க்கப் பெற்றுள்ளன. திரு. சி. சிவகுருநாதன், எம். ஏ., அவர்களின் பொருளுதவியால், அவர்தம் தாம் தந்தையரின் நினைவு மலராக, இந் நூல் வெளிவந்துள்ளது. ஸ்ரீ ஆறுமுகத் தம்பிரான் சுவாமிகள் அவர்களின் வரலாற்றுச் சுருக்கமும், இத்துடன் சேர்க்கப்பட்டுள்ளது. நல்ல வழவழப்பான தாளில், அழகிய முறையில், மிகவும் திருத்தமாக, நன்கினிது பதிப்பிக்கப் பெற்றுள்ளது. சிறந்த நல்ல போற்றுதலுக்கு உரிய நூல்! இதனை வெளியிட்ட யாழ்ப்பாணம் தமிழ் நூல்கள் பதிப்பு விற்பனைக கழகத்தாரின் சைவத் தமிழ்த் தொண்டின் திறம், மிகவும் புகழ்ந்து மகிழத் தக்கது. இத்தகைய சிறந்த நூல்களை வெளியிட்டுப் பரப்புதல் சைவத் தமிழ் வளர்ச்சிக்குப் பெரிதும் பயன்படுவதாகும். பக்கம் 120. விலை குறிப் பிடப் பெறவில்லை. கிடைக்குமிடம் :- **யாழ்ப்பாணம் பதிப்பு விற்பனைக் கழகம்,** 411, காங்கேசன் துறை வீதி, யாழ்ப்பாணம். இலங்கை.

—ஆசிரியர்,

# ஸ்ரீ ராமாயண ரஸப்ரவாஹம்

(மகாவித்வான் பி. ப. அண்ணங்கராசாரிய சுவாமிகள், காஞ்சிபுரம்)

(முற்றொடர்ச்சி)

"க : தர்மஜ்ஞ : ?"

இனி 'க ; தர்மஜ்ஞ ;?' என்கிற மூன்ருவது வினவை விவரிப்போம். தர்மஜ்ஞ: என்பதற்கு, தருமமறிந்தவர் என்று பொருள். ஆண்டாள், நாச்சியார் திருமொழியில் (14—6), "தருமமறியாக் குறும்பனை" என்று கண்ணபிரானைத் தருமமறியாதவன் என்ருள். அவ்வியல் புக்கு நேர்மாருகத் தருமம் அறிந்தவன் எனப்படுகிருன் இராமபிரான். தருமமாவது என்ன என்று ஆராய்வோம். சாஸ்த்ரங்களில் பலவகைத் தருமங்கள் சொல்லப் பட்டிருந்தாலும், இராமன் அறிந்ததாகச் சொல்லும் தருமம் எதுவாயிருக்கக் கூடுமென்று பார்க்கவேணும். ஸுந்தர காண்டத்தில் (38—41) 'ஆந்ருசம்ஸ்யம் பரோ தர்ம: த்வத்த ஏவமயா ச்ருத :' என்பது பிராட்டியின் வார்த்தையாகக் காண்கிறது. ஆந்ருசம்ஸ்யமாவது இரக்கம்; அதுதான் பரம தர்மமென்று இராமனுடைய கொள்கையாம். ஆகவே இரக்கமறிந்தவன் என்று பொருள் கொள்ளலாம். இரக்கமுடையவன் என்றபடி. வேதாந்த தேசிகர் தசாவதார ஸ்தோத்திரத்தில் ஒவ்வோர் அவதாரத்திற்கும் தனித்தனியே ஒவ்வொரு சுலோகமிட்டு, முடிவில் பத்து அவதாரங்களையும் சேர்த்து ஒரே சுலோகத்தில் சொல்லும்போது, ஒவ்வோர் அவதாரத்தையும் ஒவ்வொரு விசேஷணமிட்டுச் சொல்லி வருகையில் ஸ்ரீராமாவதார ப்ரஸ்தாவத்தில் 'கருணு காகுத்ஸ்த !' என்று கூறியிருப்பதனுல் இராமன் கருணையே வடிவெடுத்தவன் என்று சொல்லத் தகுதியுடையவன்.

கருணையாவது என்ன என்பதையும், பெருமாளிடத்தில் காணும் கருணை எப்படிப் பட்டது என்பதையும் இங்கே விவரிக்க ப்ராப்தமாகிறது. அமர கோசத்தில் (1—7—18) 'காருண்யம் கருணு க்ருணு க்ருபா தயா அநுகம்பா ஸ்யாத் அநுக்ரோசோபி" என்று ஏழு பதங்கள் பர்யாய நாமங்களாகப் படிக்கப்பட்டிருக்கின்றன. இவற்றுள், அநுகம்பா, அநுக்ரோச ; என்னும் பதங்களும் பர்யாயமாகச் சேர்ந்திருக்கின்றபடியால் அப்பதங்களின் பொருளேதான் கருணையின் பொருளுமாகக் கூடியது. துக்கத்தினுல் நடுங்குபவனைக் கண்டு தானும் நடுங்குகை அநுக்ரோசம் என்பது உலகில் அனைவரும் இசைய வேண்டிய பொருளாகும். இதுதான் கருணை யெனப்படும். ஆகவே, பிறர்படும் துயரைக் கண்டு தானும் ஐயோவென்று துயருற்றிருக்கை கருணை, அதை நன்கறிந்து அப்படியே வர்த்திப்பவன் இராகவன் என்றதாயிற்று. இக்குணம் ஸ்ரீராமாயணத்தில் பல இடங்களில் காணப்படுமாயினும், சில இடங்களைகளை இங்கு எடுத்துரைத்து அநுபவிப்போம். தர்மமாவது கருணையென்று கூறி அதனை விவரித்தல் :—

தசரத மன்னவன் இராமனுடைய திருக்குணங்களையும், அவனுக்கு ஜனங்களிடத்திலும், ஜனங்களுக்கு அவனிடத்திலும் அமைந்துள்ள அளவு கடந்த அன்பையும் நோக்கி, அவனை இளவரசாக முடிசூட்டி அரசாட்சிச் செல்வத்தை அவனிடத்தில் ஒப்புவித்துத் தான் இளைப்பாற வேண்டுமென்று விருப்பங்கொண்டு மந்திரிகளோடுங் கலந்து ஆலோசித்துத்

தனது கருத்தைத் திடப்படுத்திக் கொண்டு விரைவாகவே அதனைச் செய்து முடிக்கக் கருதி, அங்நாட்டிலுள்ள மன்னர்களையும் மகா ஜனங்களையும் எல்லாம் வரவழைத்துப் பெருஞ்சபை கூட்டி, அவர்களுக்குத் தன் கருத்தை வெளியிட்டனன். அப்போது அவர்கள் யாவரும் அளவற்ற ஆனந்தம் அடைந்து, 'கிழவரே! நீர் ஒழிந்துபோம். இராமனுக்கே முடிசூட்டுவீராக' என்று மிகப் பெரிய கோஷமாகக் கூறினர்.

தன் விருப்பத்தை அனைவரும் ஆமோதித்தது பற்றி உள்ளம் பூரித்த தயரதன், இராமனிடத்தில் ஸகல ஜனங்களுக்கும் இங்ஙனம் அன்பு நிறைந்திருக்கும் காரணத்தைத்தான் அறிந்திருக்தும், அவர்கள் வாயிலாகவே அதை இனிதாகத் தெரிந்து கொள்ள விரும்பி அவர்களை நோக்கி 'ஓ மன்னவர்களே! மகா ஜனங்களே! என் மனத்தில் தோன்றிய விருப்பத்தை நானே சுதந்திரனாய்ச் செய்து முடித்துக்கொள்ள வல்லேனாயிருந்தும் உங்கள் கருத்தையும் அநுசரித்து நடந்து கொள்ள வேண்டுமென்று எண்ணி உங்களையும் வரவழைத்துக் கேட்டேன்.

கேட்டவுடனேயேநீங்கள், 'கிழவா! ஒழிந்துபோ, கிழவா! ஒழிந்துபோ; இராமனுக்கே முடி சூட்டவேணும்' என்று பேரிரைச்சல் செய்து கூறுவதை நோக்குங்கால், என்னரசாட்சியில் நீங்கள் யாவரும் மிகக் கஷ்டம் அடைந்திருந்தீர்கள் போலவும், அந்தக் கஷ்டத்தை எப்போது தவிர்த்துக் கொள்ளப் போகிறோமென்று சமயம் பார்த்திருந்தீர்கள் போலவும் நினைக்க வேண்டியதாகின்றதே; 'சக்கரவர்த்தியாகிய நீர் உம்முடைய இஷ்டப்படி செய்து கொள்ளலாம். எங்களைக் கேட்க வேணுமோ?' என்று மரியாதையாக வார்த்தை சொல்லி யிருக்கலாமே: அப்படிச் சொல்லாமல் என்பால் மிகவும் வெறுப்புத் தோற்றச் சொன்னீர்களே, இதற்கு என்ன காரணம் கூறுமின்?' என்றனன்.

அதற்கு அனைவரும், 'மன்னர்பிரானே! உன்மீது நாங்கள் யாதொரு குற்றமும் நினைத்திலோம்; நீ பெற்ற புதல்வன் எல்லையில்லாத நற்குணங்கள் அமையப் பெற்றவனாதலின் அவனது திருக் குணங்களில் ஈடுபட்ட நாங்கள் அவனை அரசனாகப் பெற்று அவன் கீழ்க் குடிவாழ விரும்பினோம்; அவனது திருக்குணங்களைக் கேட்க விரும்புவாயாயின் சொல்லுகின்றோம். கேட்டருள் கோமானே!" என்று பீடிகையிட்டு இராமனது திருக்குணங்கள் பலவற்றையும் சொல்லி வருகின்றார்கள்.

**பரதுக்க துக்கத்வ நிரூபணம்:**

பிறர் துயருறக் கண்டால் தான் அபரிமிதமாகத் துயருருபவன்; பிறர்க் கொரு மகிழ்ச்சி யுண்டானால் தான் மிக மகிழ்பவன் என்பது அச்சுலோகத்தின் (அயோ. 2—40) பொருள். பிறருடைய மகிழ்ச்சியில் மகிழ்பவன் என்றது இருக்கட்டும். 'பிறர் துயருறக் கண்டால் தான் அபரிமிதமாகத் துயருறுபவன்' என்றார்களே, இதுதான் தயாளுவான புருஷனின் மிகச் சிறந்த உயர்ந்த தன்மை. இங்கு இராமனது கலியாண குணங்களைச் சொல்லுவதாக மகுடமிட்டுச் சொல்லி வருகையில் (ச்லோ 26) அக்குணங்களினிடையே பரதுக்கத்து: க்கித்துவமாகிய இக்குணத்தைக் கூறியிருக்கையாலே இது மிகச் சிறந்த நற்குணமே யொழியத் தீயகுணமன்று என்பது வெளிப்படை.

ஆனால் சிலர், துக்கப்படுகை யென்பது எவ்விதத்திலும் தீய குணமேயன்றோ என்று கலங்கி ஆட்சேபங்கள் செய்வதுண்டு. ஸஹஸ்ரநாமத்தில் 'விகர்த்தா' என்கிற திருநாமத்திற்குப் பாஷ்யம் அருளிச் செய்யாநின்ற பட்டர், அவர்களது கலக்கம் நீங்க ஆட்சேப பரிஹாரம் செவ்வனே செய்தருளி யிருப்பதால், இங்கு விரிவு வேண்டா:

அகில ஹேய ப்ரத்யநீக கல்யாண குண நிதியான எம்பெருமானைத் துக்கப்படுபவனாகச் சொல்லவே கூடாதென்றும், துக்கப்படுவதென்பது ஹேய குணமே யாகுமென்றும், நினைப்பவர்களைச் சுருக்கமாகத் தெளிவிக்கிறோம் இங்கு. துக்கப் படுவதென்பது இரண்டு விதம்; ஸ்வார்த்தமென்றும் பரார்த்தமென்றும்; தனக்கொரு

கஷ்டம் நேர்ந்ததென்று துக்கப்படுவ தானது பரார்த்த துக்கம் எனப்படும். முந்தின துக்கத்தை ஹேய குணமாக நினைக்க நியாயமுண்டு. பிந்தின துக்கத்தை (அதாவது பரார்த்த துக்கத்தை) ஹேய குணமாக நினைத்தல் மிகப் பிசகு; குணங்களில் தலையானது இதுவே யாகும்.

உலகத்தில் ஒருவன் துக்கப்படும்போது அந்தத் துக்கத்தைக் கண்டு கொண்டிரா நின்ற மற்றொருவன் தானும் துக்கப்படா மல் வாளா கிடந்தால் அவனைக் கல் நெஞ்சன் என்றும், ஈரநெஞ்சு இளநெஞ்சு இல்லாதவன் என்றும், வசை கூறுகிறோம். பிறர் துக்கிப்பதைக் கண்டு பரவசமாக ஒருவன் துக்கிப்பனாகில், அவனை ஈர நெஞ்சன் என்றும், இரக்கமுள்ளவன் என்றும், பரம தயாளு வென்றும் சொல்லிப் புகழ்கிறோம். இவை இன்றாக ஒருவராலும் அபலாபம் செய்ய ஒண்ணா தவை. ஆகவே கருணையின் பொருளான பரதுக்க துக்கித்வம் என்பது மிகச் சிறந்த குணங்களில் முதன்மையாகக் கணக்கிடக் கூடியதே யன்றித் தீயகுணமாக ஒருவ ராலும் கூறவொண்ணாதது. எம்பெருமா னிடத்தில் இக்குணம் ஒன்றை மறுத்து மற்றும் பலபல குணங்களை இசைந்தாலும் பயனில்லை.

**பூர்வபக்ஷ பரிகாரம் :**

ஆனால் இங்கு ஒன்று சொல்லலாம்; பிறர்படும் துயரத்தைப் பரிஹரிக்கக் கூடிய சக்தி நமக்கில்லாமையாலே நாம் பிறர் துயரைக் கண்டு துயருறுவது சகஜம். ப்ரணதார்த்தி ஹரன் என்று பெயர் படைத்துப் பரிபூர்ண சக்தி யுக்தனான எம்பெருமான் பிறருடைய துயரத்தைக் கண்டு தானும் துயருறக் காரணமே யில்லை யென்னலாம். இங்கே அவசியம் தெரிந்து கொள்ள வேண்டிய விஷயங்களைத் தெளிவாகத் தெரிவிக் கிறோம். பிறர்படும் துயரத்தைக் கண்டு துயருறுகை என்கிறவொரு தன்மையும், பிறர்படும் துயரத்தை நீக்கத் தக்க சக்தி யுடைமை என்கிறவொரு தன்மையும் ஒன்றோடொன்று முரண்பட்டவை யென்று நினைக்கலாகாது; 'அசக்தனே துயரு றுவன், சக்தன் துயருறமாட்டான்' என்று நினைப்பது மருள். தன் குழந்தைக்கு ஒரு துன்பம் நேர்ந்து விட்டால் அதனை உடனே பரிஹரிக்கக் கூடிய சக்தி மாதாவுக்கு இருக்கச் செய்தேயும், அப் படியே அத்துன்பத்தை அவள் பரிஹரித்து விடச்செய்தேயும், குழந்தைக்குத் துன்பம் நேராமல் காக்க வேண்டியது நமது கடமையாயிருந்தும் ஏமாந்து போனோமே; அந்தோ! அநியாயமாய்க் குழந்தையைத் துடிக்க விட்டோமே! என்று பலவாறாகக் கதறி வருந்தும்படியைக் காணாதா ருண்டோ?

துச்சாஸனன் கையிலே திரௌபதி பரிபவப்பட்டுக் கூவினபோது, கண்ண பிரான் ஒருவாறு அவளது துயரைத் தீர்த் திருக்கச் செய்தேயும், "ஐயோ! அவள் கூவினபோது நான் நேரில் சென்றிருந்து உதவாது ஒழிந்தேனே, ஐயோ அவளுக்குப் பரிபவம் நேர்ந்து அவள் கதறினபின்பு நான் காரியம் செய்தேனே யன்றி முதல் தன்னிலே பரிபவமே அவளுக்கு உண்டா காதபடி ஜாகரூகனாயிராது போனேனே! அவளுக்கு நான் பெரிய கடனாளியாய் விட்டேன், என் பிறப்பு என்னாயிற்று!' என்று, தன் காவற்சோர்வை நினைத்துத் திருவுள்ளம் வேவுண்டு வருந்தினபடி யுண்டே.

மடுவின் கரையிலே முதலையினால் அடர்ப்புண்ட ஸ்ரீகஜேந்திர ஆழ்வானுடைய இடரை எம்பெருமான் தீர்த்தருளினா னேனும், அவன் தான்பட்ட பரிதாபம் பேச்சுக்கு நிலமன்றே. ஆழ்வாரும் பட்டரு மன்றோ அதையெடுத்துரைத்து உருகின வர்கள். 'கெட்டேன்! கெட்டேன்!!' என்று நொந்துகொண்டே எம்பெருமான் அரை குலையத் தலைகுலைய ஓடிவந்தான் என்கிறார் களே. இங்ஙனே பல்லாயிரம் எடுத்துக் காட்டத் தக்கவை யுண்டு. இவற்றால் பரதுக்க துக்கித்வ ரூபமான எம்பெரு மானது காருணிகத்வம் அசைக்க வொண்ணாதபடி தேறி நிற்கும், இதை ஸ்ரீராமாயணத்தில் அநுபவிக்கலாம் இடம் காட்டுதும் காண்மின்.

**வாலி மாண்ட பின்பு**
**பெருமாள் காட்டிய கருணை :**

பெருமாள் ஸுக்ரீவனுக்காக வாலியைக் கொன்றார் ; வாலி மாண்டபின் ஸுக்ரீவன் மிக வருந்தினான் ; அவனது வருத்தத்தைக் கண்டு பெருமாள் ஆற்றகில்லாது தாமும் அபரிமிதமாக வருந்தி யழுதார் என்பதைக் கூறுகின்ற வான்மீகி (கிஷ்கிந். 24–24), அந்த சுலோகத்தில் 'ஸஞ்ஜாதபாஷ்ப:' என்றதும், 'முஹுர்த்தம் விமநா : பபூவ' என்றதும் கல்நெஞ்சையும் உருக்கும் சொற்கள். ஸுக்ரீவனுடைய அழுகை ஓய்ந்தும் இராமனுடைய அழுகை ஓய வில்லை என்கிறது 'ஸஞ்ஜாத பாஷ்ப: என்பது. சிலர் உள்ளே பசை யில்லாமல் வெளியில் மாத்திரம் கண்ணீரை விட்டு துக்காபிநயஞ் செய்வதுண்டு. அப்படி யல்ல ; மதியெல்லா முள்கலங்கி நின்றா ரென்கிறது 'ராமோ முஹுர்த்தம் விமநா பபூவ' என்பது. மேலே இருபத்தைந்தாம் ஸர்க்கத்தின் முதல் சுலோகம். வாலியின் மரணத்தினால் தாரைக்கும் அங்கதனுக்கும் எவ்வளவு சோகமோ அவ்வளவுக்குச்சிறி தும் குறையாத சோகம் பெருமாளுக்கும் இருந்தது என்கின்றார் முனிவர், "ஸமாந சோக; காகுத்ஸ்த:" என்பதனால். அந்த ஸர்க்கத்தின் முடிவிலும் (52) அதையே மீண்டும் மொழிகின்றார்.

**'இயம் ஸீதா ஸஹதர்மசரீ தவ'**
**என்றதன் விவரணம் :**

ஆக, 'ஆந்ருசம்ஸ்யம் பரோ தர்ம,' என்கிற ஸ்ரீராமாயண ப்ரமாணத்தின் படி 'தர்மஜ்ஞ :' என்பதன் பொருள் விவரிக்கப் பட்டது. இனி, ஸீதா விவாஹ காலத்தில் ஜனக சக்ரவர்த்தி கூறிய, 'இயம் ஸீதா மம ஸுதா' என்கிற சுலோகத்தில் 'ஸஹதர்ம சரீ தவ' என்று சொன்னதின் கருத்திற்கு இணங்கவும் சில நிரூபணங்களைச் செய் வோம். நாம் எல்லாம் விவாஹம் செய்து கொள்ளும்போது 'இமாம் கந்யாம் தர்ம ப்ரஜார்த்தம் வ்ருணீமஹே' என்று சொல்லி (அதாவது, இந்தப் பெண்ணைத் தர்மானுஷ்டானத்திற்காகவும் சந்தான விருத்திக்காகவும் பரிக்ரஹிப்பதாகச் சொல்லி)க் கைப்பற்றுகிறோம். நம்போல் வாருடைய தர்மானுஷ்டானம் எது வென்னில், இல்லறம் எனப்படுகிற க்ருஹ ஸ்தாச்ரம தர்மாநுஷ்டானமே யாகும். இல்வாழ்க்கைத் துணைவியாக அமை கின்ற மனைவியோடு கூடி சாஸ்த்ரோக்தங் களான தருமங்களை க்ருஹஸ்தாச்ரமிகள் அனுட்டித்து வருவதுண்டு.

இராம பிரானுக்கு ஸீதா பிராட்டியை ஜனக சக்ரவர்த்தி கன்யகா தானம் செய்யும்போது, 'இயம் ஸீதா தவ ஸஹ தர்மசரீ' (இராமா ! நீ அனுட்டிக்கும் தருமத்திற்குத் துணைவியாம் அவள் இந்த ஸீதை) என்று சொல்லிக் கொடுத்திருக் கிறார். இராமன் அனுட்டிக்கும் தருமம் எது வென்று பார்க்க வேணும். பிராட்டி இராவணனுக்கு ஹிதோபதேசம் செய்யும் போது (ஸுந்தர காண்டம் 21—20) 'விதிதஸ் ஸ ஹி தர்மஜ்ஞச் சரணாகத வத்ஸல :' என்று கூறுகின்றாள். பெரு மானை தர்மஜ்ஞரென்று சொல்லி உடனே அதை விவரிக்கிறவார்த்தையாக 'சரணாகத வத்ஸல :' என்றுரைத்தாள். இதனால், இராமபிரான் இவ்வவதாரத்தில் கைப்பற் றின தருமம் சரணாகத பரித்ராணமே ( அதா வது அடைக்கலம் புகுந்தவர்களைக் காத் தருள்வதே) என்று தேறுகின்றது. ப்ரபந்ந ஜந ஸம்ரக்ஷணமே பெருமானுக்குப் பரமதர் மம். இத்தருமத்திற்குத் துணைவியாகவே பிராட்டி அமைந்தாள்.

ஆனது பற்றியே திருமந்த்ரார்த்தத் தில் பிள்ளைலோகாசாரியர், 'ரக்ஷிக்கும் போது பிராட்டி ஸன்னிதி வேண்டுகை யாலே இதிலே ஸ்ரீஸம்பந்தம் அநுஸந் தேயம்" என்றும் 'இவள் ஸன்னிதி யாலே காகம் தலைபெற்றது, அதில்லாமை யாலே ராவணன் முடிந்தான்' என்றும் அருளிச் செய்துள்ளார். இது ஸ்ரீராமா யணத்தில் பல பல விடங்களிலும் காணப் படுகிறது. கம்பராமாயணம் வாலி வதைப் படலத்தில் ஒரு செய்யுளினால் இது நன்கு மூதலிக்கப்படுகிறது. கம்பர் செய்யுள் காட்டும் பிராட்டியின் ஏற்றம்,

"கோவியல் தருமமுங்கள்
குலத்துதித்தோர்கட் கெல்லாம்
ஓவியத் தெழுதவொண்ணா
வுருவத்தா யுடைமையன்றே

ஆவியைச் சனகன்பெற்ற
அன்னத்தை அமிழ்தின்வந்த
தேவியைப் பிரிந்தபின்னைத்
திகைத்தனை போலுஞ்செய்கை"

இச்செய்யுள் இன்சுவையே வடிவெடுத்தது. பிராட்டி அருகே யில்லாமையினால்தான் இராமன் வாலிவதஞ் செய்ய நேர்ந்தது என்கிற தத்துவம் இங்கு வெளியாகின்றது. இச்செய்யுளில் 'தேவியைப் பிரிந்த பின்னைத் திகைத்தனை போலுஞ் செய்கை' என்றது, ஸ்ரீராமாயணக் கடலில் மிக முக்யமாகக் கொள்ளத் தக்க மகாரத்னம் போன்ற ஒரு சம்பிரதாயப் பொருளை யுணர்த்துகின்றது. அதைச் சிறிது விவரிப் போம்.

பகவத் கீதையில் கண்ணன் தன்னுடைய அவதார ப்ரயோஜனத்தை அருளிச் செய்யுமிடத்து, 'பரித்ராணாய ஸாதூநாம் விநாசாய சதுஷ்க்ருதாம்' என்கிறான். ஸாதுக்களை ஸம்ரக்ஷிப்பதும், துஷ்டர் களைத் தொலைப்பதுமாகிய செயல்களை அவதாரத்திற்குப் பயனாகக் கூறியுள்ளான். இவ்விரண்டு செயல்களும் ஸ்ரீராமாவதாரத்தில் விசேஷமாக நடைபெற்றிருப்பதை நாம் ஸ்ரீராமாயண முகத்தினால் அறி கிறோம். அதில் அரிய பெரிய விசேஷ மொன்றும் தெரியவருகின்றது. அது யாதெனில், சீதா பிராட்டி இராகவனோடு கூடியிருக்குங்காலத்தில் எப்படிப்பட்ட அபராதிகளுக்கும் விநாசம் ப்ராப்தம் ஆகியதில்லை; பெருமாள் அவளைவிட்டுப் பிரிந்திருக்கிற காலத்தில்தான் அபராதத் தில் குறைய நின்றவர்களையும் கண்ணற் றுக் கொலைசெய்து தொலைக்கிறார் என்ப தேயாம். இது ஸ்ரீராமாயணத்தில் ஆதி யோடந்தமாகவுள்ள கதைகளினால் நன்கு தெரிகின்றது.

## பெருமாள் செய்யும் வதமெல்லாம் பிராட்டியில்லாத காலத்தில் :

இராமன் முதன்முதலாகச் செய்தது தாடகையினுடையவும், ஸுபாஹு முதலிய அரக்கர்களினுடையவும் வதம். முதன்முதலாகப் பெண்கொலை புரிந்தார் என்னும் அபவாதம் இற்றைக்கும் அழிந்த தில்லை. அப்படிப்பட்ட கொலைத் தொழில் செய்த காலத்தில் பெருமாளுக்குப் பிராட்டியின் ஸம்பந்தம் உண்டாகவே யில்லை. பிரமசாரியாய் இருக்கும் போது தானே மாமுனி வேள்வியைக் காத்தது. அப்போது பிராட்டி அருகே யிருந்திருந் தால் தாடகாவதம் நேர்ந்தே யிராது. அவள் அவன் அருகே யில்லாதது பற்றியே பெரு மாள் பெண் கொலையென்றும் பாராமல் தாடகாவதம் பண்ண நேரிட்டது.

பிறகு மிதிலாபுரிக்குச் சென்று பிராட் டியை மணம் புணர்ந்தார். அது முதலாகப் பிராட்டியோடு கூடியிருக்கிறவரையில் ஒரு கொலைத் தொழிலும் நடந்ததில்லை. தீவ்ர மான அபராதம் செய்தவர்களுக்கும் ரக்ஷ ணம் நேர்ந்திருக்கின்றதே அன்றி, கொலை என்பது ஒருவர்க்கும் கிடையாது. இதன் மேல் சிலர் சொல்லக்கூடிய ஆட்சேபங் களையும் பிரசங்கித்துப் பரிகரிக்கிறோம்.

## விராதவதத்தின் மருமமுணர்த்துதல் :

விராதனென்னும் அரக்கனை வதம் செய் தது பெருமாளும் பிராட்டியும் கூடியிருந்த காலத்தில் தானே; கரன் தூஷணன் முதலிய பதினாலாயிரம் அரக்கர்களின் வதமும் பிராட்டியோடு கூடியிருக்கும்போது தானே நடைபெற்றிருக்கிறது. ஆகவே, பிராட்டியருகே யிருக்கும்போது பெருமாள் ஒருவரையும் வதஞ்செய்ததே கிடையா தென்று சொல்லுவது எப்படி பொருந் தும்? என்று சிலர் கேட்கக் கூடும். அவர் களுக்குச் சொல்லுகிறோம்: விராதனுடைய பிரஸ்தாவம் ஆரணிய காண்டத்தில் இரண்டாவது ஸர்க்கத்தில் வருகிறது. அங்கே கதைப்போக்கு உள்ள விதத்தை நன்கு கவனிக்கவேணும்.

விராதன் வந்ததும் பிராட்டியைக் கொள்ளை கொள்கிறான். பிறகு அவளை விட்டுவிட்டு இராமனையும் இலகுமணனை யும் தூக்கிக் கொண்டு வேறொரு வனத்தில் நுழைகிறான். அப்போது பிராட்டி தான் தனித்து நின்றுபோனதைக் குறித்துப் புலம்புகிறாள். இவ்விஷயம், ஆரணிய காண்டம் மூன்றாவது ஸர்க்கத்தின் முடிவி லும் நான்காவது ஸர்க்கத்தின் முதலிலும் ஸ்பஷ்டமாகவுள்ளது. சீதை தன்னைத் தனியாக விட்டுவிட்டு ஸ்ரீராமலக்ஷ்மணர் களை விராதன் வேறொரு காட்டுக்குத் தூக் கிச் சென்றபோது 'ஓ அரக்கனே! இனி என்னைச் செந்நாய்களும் புலிகளும் சிறுத்

தைகளும் கொன்று தின்றுவிடுமே: அவ் விருவரையும் விட்டு என்னைக் கொண்டு போகலாகாதா?' என்று கதறுகின்றாள். இதனால் விராதவதம் செய்யப்படுகிற காலத்திலும் இடத்திலும் பிராட்டியின் ஸன்னிதானமில்லை என்பது ஸ்பஷ்டமாகத் தெரின்றது.

இங்கு மற்றொரு விஷயம் முக்கியமாகக் கவனிக்கத் தக்கதுண்டு; ராமலக்ஷ்மணர்கள் விராதனை எவ்வளவு நலிந்தும் அவன் மடியவே யில்லை. பல அம்புகளைப் பிரயோகித்துப, இருவரும் இரண்டு கத்திகளில் வெட்டியும் தரையில் தள்ளிப் பலவாறு உதைத்துங்கூட அவ்வரக்கன் மரணமடையவே யில்லை.

பிறகு அவன் எவ்வாறு மரணம் அடைந்தான் என்னில்; அவன் தனது வரலாறுகளைத் தானே சொல்லிக் கொண்டு, 'இராமா! இப்பொழுது உன்னால் நான் ஒரு சாபத்தினின்று விடுபட்டவனாயினேன். என்னைப் பள்ளம வெட்டிப் புதைத்துவிடு' என்றான். பிறகு அவ்விதமே செய்யப்பட்டிருக்கிறது. இதனால், விராதன் தன் வதையைத் தானே வேண்டிச் செய்வித்துக் கொண்டான் என்பது விளங்குகின்றது. இதுவும் பிராட்டியின் முன்னிலையில் நடைபெறவில்லை என்றும் தெரிகின்றது.

**கரதூஷணாதி வதத்தின் மருமமுணர்த்துதல் :**

இனி, பிராட்டியின் முன்னிலையிலேயே கர தூஷணாதிகளின் வதம நடந்திருக்கிறது என்கிற ஆட்சேபத்திற்கும் பரிஹாரம் கேண்மின்; ஜனஸ்தானத்து ராக்ஷசப் பெருஞ் சேனைகள் இராமனைக் கிட்டி வந்த போது இராமன் லக்ஷ்மணனை நோக்கிக் கூறியதாவது, 'லக்ஷ்மணா! நீ வில்லையும் அம்புகளையுங் கொண்டு சீதையுடன் அப்பால் போய்விடு; அதோ மரங்களால் மறைக்கப்பட்டு நுழையக் கூடாமலிருக்கின்ற குகைக்குள் சீதையையும் அழைத்துக் கொண்டு சென்று அவளைக் காத்துக் கொண்டிரு; தாமதம் செய்யாமல் விரைந்து செல். இத்தனை யரக்கர்களையும் நீயே வதைக்க வல்லையாயினும் இப்பொழுது நானே இவர்களை யெல்லாம் கொலை செய்யக் கருதியிருக்கின்றேனாதலால் நீ சீதையுடன் இவ்விடம்விட்டுப் புறப்பட்டுப் போய்விடு' என்று.

அதன் பிறகு லக்ஷ்மணன் சீதையுடன் சென்று குகைக்குள் நுழைந்த பின்பே இராமன் கவசங்களைத் தரித்து வில்லையும் அம்புகளையும் எடுத்துக் கொண்டு போர் புரிய எழுந்தனன் என்று ஆரண்ய காண்டத்து இருபத்து நான்காவது ஸர்க்கத்தில் சொல்லப்பட்டுள்ளது. இது கொண்டே வேதாந்த ரகுவீரகத்யத்தில் கரவதத்தைக் கூறும் பிரகரணத்தில் 'அஸஹாய சூர!' என்றது. ஆகவே, பிராட்டியின் ஸன்னிதானம் இல்லாத இடத்தேதான் கர தூஷணாதிகளின் வதம் நடந்தது என்பது விளங்கிற்று.

**மாரீச வதத்தில் அருமையானதொரு மருமம் :**

இதற்கடுத்தபடியாக மாரீசவதம் நடந்திருக்கிறது. அப்போது பிராட்டியை விட்டுப் பெருமாள் (மாரீசன் பின்னே) நெடுந்தூரம் எழுந்தருளி யிருக்கிறாரென்பது அனைவரும் அறிந்த விஷயம். அவனை வதைக்க வேண்டி யிருந்தபடியாலும், பிராட்டி அருகே யிருந்தால் அவன் வதம் பெறமாட்டான் ஆகையாலும, இதற்காகவே அவனை வெகுதூரம் கொண்டு போனார் பெருமாள் என்கிற மருமம் இங்கு உணரத் தக்கது.

**சூர்ப்பணகா பங்கத்தின் மருமம் :**

விராத வதத்திற்கும், கர தூஷணாதி வதத்திற்கும் இடையில் சூர்ப்பணகா பங்கம் நடந்திருக்கின்றது. பெருமாள் தாடகையை வதஞ் செய்ததுபோல் சூர்ப்பணகையையும் வதஞ்செய்து முடித்திருக்கலாம். அப்படி செய்திருக்குமளவில், மேலே பெருந்தீங்கு விளையாமலுமிருக்கும். அவளை அங்கபங்கஞ் செய்து உயிரோடு விட்டதனாலன்றோ அவள் இலங்கையிற் சென்று முறையிட்டுச் சீதையின் அபஹாரத்திற்குக் காரணமாயினள். அவளைப் பஞ்சவடியிலேயே குழிவெட்டிப்புதைத்திருந்தால் மிகவும் நலமாயிருக்குமே. ஸமர்த்தரான பெருமாள் ஏன் அது செய்யவில்லையென்று கேட்கில், பிராட்டி அருகே

யிருந்ததே இதற்கு இடை யூருயிற்றென்பது முக்கியஹேது.

'முக்கியஹேது' என்கையாலே அமுக்கியஹேதுவுமொன்றுண்டென்று தெரிய வருமே; அதுவென் என்னில்: தாடகாவதத்தை விச்வாமித்திர முனிவர் கட்டளையிட்ட படியாலே செய்தார்; அங்ஙனம் சூர்ப்பணகையின் வதத்தைக் கட்டளையிட யாரும் இல்லாமையினுல் அது நடைபெறவில்லை என்பதேயாம். இதுவுமொரு சமாதானம் எனினும், பிராட்டி அருகே யிருந்ததே வதஞ் செய்யாமைக்கு முக்கிய காரணம் என்று கொள்ளத் தக்கது.

பிராட்டி பெருமானை விட்டுப் பிரிந்து இலங்கை புக்கபின்பு, வாலிவதம் என்கிற மிகப்பெரிய காரியம் நடந்திருக்கின்றது. இது நியாயமா அநியாயமா? என்கிற விசாரணை இற்றைக்கும் அருது நிகழ்ந்து வருகின்றது. வேதாந்த தேசிகர் ஸங்கல்ப ஸூர்யோதயத்தில் 'நிரவதி குணக்ராமே ராமே' என்னும் சுலோகத்தில் இதைச் சுட்டிக் காட்டியுமிருக்கிருர். வாலி வதம் நியாயமானதே என்று பண்டிதர்கள் எவ்வளவு பொருத்தமான ஸமாதானங்கள் சொன்னுலுங்கூட, அதை ஏற்றுக் கொள்வது மேட்டு மடையாகவே காண்கிறது.

'என்னை எப்படி நீ கொன்ருய்?' என்று வலிதாக ஆட்சேபித்த வாலிதானே தன்னை வதம் செய்ததற்குப் பொருத்தமான காரணம் இருப்பதைக் கண்டுபிடித்துத் தானே கூறிவிட்டதாகக் கம்பர் எழுதி வைத்துள்ளார்; 'தேவியைப் பிரிந்த பின்னைத் திகைத்தனை போலுஞ் செய்கை' என்பதே அது. 'இராமா! இப்போது பிராட்டி அருகே யிருந்தாளாகில் அநீதியான இவ்வதத்தை நீ செய்திருக்க மாட்டாய்; அவள் அருகிலில்லாதது காரணமாகவே இது செய்யத் துணிந்தாய்' என்று வாலி கூறினவிது மிகப் பொருத்தமாகவே யுள்ளதன்ரே! இதுவொரு சமத்காரமான வார்த்தை போலும் என்று நினைக்காமல், இதுதான் பரமார்த்தம் என்றே நினைக்கத் தக்கதன்ரே? பிராட்டி அருகே யில்லாத சமயங்களில் நடந்த வரலாறுகளை ஆராய்வது போலவே அவள் அருகே யிருக்கும் சமயங்களில் நடந்த வரலாறுகளையும் ஆராயவேணும்.

**காகத்தைக் காத்த**
**கதையின் மருமங்கள்:**

சூர்ப்பணகையின் விஷயமொன்று கீழே தெரிவிக்கப்பட்டது. அதற்கும் முந்தியதான காகத்தின் கதையைக் கொள்வோம். இது சித்திரகூட மலைச் சாரலில் நடந்தது. அயோத்யா காண்டத்தில் கூறப்படவேண்டிய கதை இது. ஆனுல், இது அங்குக் கூறப்படவில்லை. சுந்தரகாண்டத்தில் முப்பத்தெட்டாவது சர்க்கத்தில் பிராட்டி அனுமானிடம் அடையாளமாகச் சொல்லி யனுப்புவதாக அமைந்துளது. அங்குச் சொல்லப் பட்டிருக்கிறவிதம் யாதெனில்; 'அனுமானே! முன்பு சித்திரகூட பர்வதத்தின் வடகிழக்கு மூலையிலுள்ள தாழ்வரையில் ஏகாந்தமானதோர் இடத்தில் வாழ்ந்திருக்குங்கால் ஒரு சம்பவம் நிகழ்ந்தது. ஒரு சமயம் நான் விளையாடிக் களைப்புற்று இராமனது மடியில் உட்கார்ந்திருக்கையில் ஒரு காகம் மாமிசத்தின் விருப்பத்தினுல் என் மார்பினிடையில் மூக்கால் குத்தியது. நான் எவ்வளவு அதட்டியோட்டியும் அது போகாமல் என் தனங்களைக் குத்திக் கொண்டு அங்கேயே மறைந்திருந்தது. அதைக்கண்டு இராமன் என்னைப் பரிகசிக்கையில் நான் வெட்கமும் கோபமும் காட்டினேன், பிறகு ராமன் என்னை நல்லவார்த்தைகளால் சமாதானப்படுத்தினன். நான் இளைப்புற்று இராமனது மடியில் படுத்துறங்கினேன்.

தூக்கந்தெளிந்து நான் எழுந்திருக்கையில்இராமனும் என் மடிமேல் படுத்துக் கண வளர்ந்தருளினுன். அப்பொழுது அக்காகம் மீண்டும் அவ்விடம் வந்து எனது மார்பினிடையில் அதிகமாகப் பீறிப் புண்படுத்தியது. அந்தப் புண்ணினின்று பெருகிய ரத்தித்தினுல் ராமன்நனைந்தனன். பிறகு என்னுலெழுப்பப்பட்ட இராமன் எனது கஷ்டத்தைக் கண்டு மிகச்சீறித் தனது தர்ப்பாஸனத்தினின்றும் ஓர் தர்ப்பத்தை யெடுத்து அதைப் பிரமாஸ்திர மந்திரத்தினுல் மந்திரித்து அக்காகத்தின்

மேல் எய்தனன். அக்காகம் இந்திரனது மகனும். அவனைப் பிரமாஸ்திரம் ஆகாயத்தில் துரத்திக் கொண்டே போயிற்று. அக்காகம் தன்னை எவரேனும் காப்பாற்றுவாரென்று மூவுலகும் திரிந்தது, தந்தை தாயர் தேவர் முனிவர் முதலிய யாவரும் கைவிட்டதனால் முடிவில் இராமனிடமே வந்து சேர்ந்தது. சரண்யனான ராமன் கருணையினால் கொல்லாது விட்டனன்; ஆனாலும் தனது பிரம்மாஸ்திரம் வீணாகாதாகையால், அக்காகத்தின் விருப்பத்தின்படி அதன் வலது கண்ணைக் குருடாக்கி உயிரோடு விட்டனன்; பிறகு காகம் தன்னிருப்பிடம் சென்று சேர்ந்தது' என்றிங்ஙனே பிராட்டி கூறியதாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

**காகம் தலைபெற்றது பிராட்டி ஸன்னிதியாலே :**

பிராட்டி விஷயத்தில் காகாசுரனுடைய அபராதம் வலிதா? இராவணனுடைய அபராதம் வலிதா? என்று ஆராய்ந்து பார்க்குமளவில், இராவணனுடைய அபராதம் சிறிது, காகத்தின் அபராதமே மிகவும் வலிது என்று நிர்ணயிக்கத் தட்டில்லை. திருமேனியை நலிந்து உதிர வெள்ளம் பெருகும்படியான மகா அபராதத்தை இராவணன் செய்ய வில்லையே! இதை மணவாள மாமுனிகளும் திருமந்திரார்த்தத்தில் விளங்கக் காட்டியருளினர். பிராட்டியைக் கவர்ந்து சென்ற இராவணன் இராமபிரானோடு போர் புரியும்போதும் பிராட்டியை அசோக வனத்தில் வைத்திடாமல் அருகிலேயே வைத்துக் கொண்டு யுத்தம் நடத்தி யிருந்தானாகில், காகம் போலவே அவனும் உயிர் பெற்றே உய்ந்திருப்பன் என்பது நம் ஆசாரியர்களுக்குத் திண்ணமான நம்பிக்கை, ஆகவே தான், 'இவள் ஸன்னிதியாலே காகம் தலை பெற்றது' என்றவுடனே, 'அதில்லாமையாலே ராவணன் முடிந்தான்' என்றருளிச் செய்தார் பிள்ளை லோகாசாரியர்.

**ஆட்சேப ஸமாதானம் :**

பிராட்டி அங்கே யிருந்தால் மாத்திரம் போதுமா? சரணாகதி செய்தாலன்றோ பெருமாள் ரட்சிக்கக் கூடும். காகம் சரணாகதி செய்தபடியாலன்றோ உயிர் பெற்றது. 'த்விதா பஜ்யேயமப்யேவம் ந நமேயம் து கஸ்யசித்' என்று ஒருவர்க்கும் தலைவணங்க மாட்டேன் என்று கண்டிப்பாகக் கூறுகின்ற இராவணன் சரணாகதி செய்ய மாட்டானே: அப்படிப்பட்டவனுக்கு அருகே பிராட்டி இருந்துதான் என்ன பயனாகும்? என்றிப்படி சிலர் கேட்கக் கூடும்.

**காகம் உயிர்பெற்றது பிராட்டியினாலேயே:**

அவர்களுக்குச் சொல்லுகிறோம். 'காகம் சரணாகதி செய்தபடியினால்தான் உயிர் பெற்றது' என்று நினைப்பது பொருத்தமற்றது. காகம் மூவுலகும் திரிந்தும் எங்கும் கால்பாவி நிற்க இடம் பெறாமையாலே தரிப்பற்றுக் கீழே விழுந்த அத்தனையே யொழிய, பெருமாள் பக்கலில் சரணாகதி செய்யவேணும் என்கிற எண்ணத்தோடு வந்ததன்று. 'புரத: பதிதம் தேவீ தரண்யாம் வாயஸம்' என்று பாத்மபுராணத்தில் ஸ்பஷ்டமாகச் சொல்லிற்று.

**காகம் சரணாகதி செய்ததுண்டா?**

ஸ்ரீராமாயணத்திலும் 'ஸ தம் நிபதிதம் பூமௌ' என்று, தரிப்பற்றுத் தரையில் விழுந்த மாத்திரமே சொல்லிற்று. ஆளவந்தார் ஸ்தோத்திரத்தில் (63) 'ரகுவர யதபூஸ் த்வம் தாத்ருசோ வாயஸஸ்ய ப்ரணத இதி தயாளு:' என்றவிடத்து வியாக்கியானத்தில் - வேதாந்த தேசிகர் – காகம் நமஸ்கரித்து ஸரணாகதிசெய்ய வில்லையென்றும், கருணா காகுத்ஸ்தனுடைய திருவுள்ளத்தினாலே சரணாகதனாகக் கொள்ளப் பட்டதத்தனை என்றும் நன்கு காட்டப்பட்டிருக்கிறது. 'எத்திசையு முழன்றோடி யிளைத்து விழுங் காகம்போல்' என்று அடைக்கலப் பத்திலும் அவர்தாமே கூறினர். இளைத்து விழுந்த அத்தனையே யொழிய, சரணாகதி செய்தமையில்லை யென்பதே இதன் கருத்து.

காகம் சரணாகதி செய்ததாகவும் ஒரு யோஜனை யுண்டு; அதைக்கொண்டே ஸ்ரீவசநபூஷணத்தில் 'தர்மபுத்ராதிகளும்

திரௌபதியும் காகமும் காளியனும்' என்று, சரணம் புகுந்தவர்களிலே காகமும் சேர்த்துச் சொல்லப்பட்டது.

**சரணுகதியின் உண்மை நிலை :**

இந்த மருமத்தையும் சிறிது விவரிப்போம் இங்கு ; சரணுகதி யாவது என்ன ? என்று விமர்சிக்குமளவில், அதைப்பற்றிப் பலர் பலவகையாகக கூறுவர். 'எம்பெருமான் செய்ய நினைக்கும் ரக்ஷணத்திற்கு இடையூருகத் தான் செய்யும் ப்ரவ்ருத்தியிலிருந்து விலகி நிற்பதே சரணுகதி' என்பதும் ஒரு முடிவாகத் தேறியுள்ளது. இப்படிப்பட்ட சரணுகதிதான் காகத்தினிடத்தில் காணமுடியும். இதற்காகப் பெருமாள் காகத்திற்கு உயிர்ப் பிச்சை அளித்தாரென்பர்.

**காகத்துக்கும் ராவணனுக்கும் வாசி :**

இப்படிச் சொல்வதானுல் இராவணனிடத்திலும் இங்ஙனே சொல்வதற்குத் தடையில்லை. எப்படியெனில், 'இன்று போய் நாளைவா' என்று சொல்லி இராவணனுக்குப் பெருமாள் நியமனம் தந்தருளும்போது, இராவணனது நிலைமையோடு ஒத்திருந்ததன்ருே ? சசால சாபஞ்ச முமோச வீர : என்றது போக்கற்றுச் செயல்மாண்டு நின்ற நிலையே யன்ருே.

ஆக, காகத்தினிடத்தில் சரணுகதியென்று சொல்லக் கூடியதான நிலைமை எது காண்கிறதோ, அது இராவணனிடத்திலும் காண்பதனுலே மகாஅபராதியான காகத்தையே ரக்ஷித்தருளின பெருமாள் அவ்வளவு அபராதமில்லாதவனுன ராவணனை அவசியம் ரட்சித்தே யிருக்க வேண்டும்: ஏன் ரட்சிக்க வில்லை என்று கேட்டால், பிராட்டி அருகிலிருக்கையாகிற ஒரு வாய்ப்பு காகத்திற்கு இருந்தது ; அது இராவணனுக்கு இல்லையே. ஆதலால் தான் ரட்சிக்கவில்லை என்று சொல்லக் குறையில்லையாயிற்று.

ஆக, இவ்வளவு நிரூபணங்களினுல், பிராட்டி இராவணனுக்கு உபதேசித்த இதவசனத்தில் 'தர்மஜ்ஞ : சரணுகத வத்ஸல :' என்று கூறியதையும், ஸீதா விவாஹ காலத்தில், 'மம ஸுதா ஸஹதர்ம சரீ தவ' என்று ஜனக சக்ரவத்தி சொல்லியிருந்ததையும் இணக்கி, தேறின ஸாரப் பொருள் தெளிவிக்கப்பட்டு முடிந்தது.

—தொடரும்.



## மதிப்புரை

**(2) தென்னவன் பிரமராயன் :**

இந்நூல் 'யாழ்ம்பாணம்–**தேவன்**' அவர்கள் இயற்றியது. இதன்கண் மாணிக்க வாசகரின் வரலாறு, நாடக முறையில், நடித்து மகிழத்தக்க வகையில், எளிய இனிய தமிழில், பதினெரு காட்சிகளாக அமைந்துள்ளது. இடையிடையே இனிய திருவாசகப் பாடல்கள், தக்க இடத்தில் பொருத்தமாகச் சேர்க்கப் பெற்றுள்ளன. சைவப் பேரறிஞர்கள் பலர், அணிந்துரை வழங்கியுள்ளனர். நல்ல சிறந்த நூல். திருத்தமாகவும், அழகுறவும் நன்கு அச்சிடப்பட்டுள்ளது. பக்கம் 60. விலை ரூபா ஒன்று. கிடைக்குமிடம் :– **ஆசிர்வாதம் புத்தக சாலை,** 32, கண்டி வீதி, யாழ்ப்பாணம், இலங்கை.

# ஞான சித்தர்களும் சித்த மருந்தும்

(திரு. வி. பலராமையா அவர்கள், பி.ஏ., பி.எல்.,
பிரதம மாகாண மாஜிஸ்ட்ரேட், சென்னை-8.)

முன் கட்டுரையில் காய்ச்சலுடன் தலை கனத்திருந்தால், அதற்குக் கண்ணில் கலிக்கம் போடும் முறையைப் பற்றி எழுதியிருந்தேன். அதில் பால் என்று குறிப்பிட்ட இடத்தில் தாய்ப்பால் என்று எழுதத் தவறிவிட்டதை வாசகர்களுக்குத் தெரிவிக்க அவாக் கொள்கிறேன்.

இதுவரையில் தலைக்குக் கருவேம்பின் தைலம், மருதணித் தைலம் முதலியவைகளை முடி உதிர்வுக்கும், நரைக்கும் குறிப்பிட்டிருந்தோம். முக்கியமாக, பலர் நிரந்தரமான தலைவலியினாலும், மற்றும் சிலர் ஒற்றைத் தலைவலியினாலும் அவதியுறுகிறார்கள். தலையில் வியாதி தோன்றினால், அது தனிப்பட்ட முறையில் எங்கிருந்தோ நேராகத் தலைக்கு வந்த வியாதியில்லை. வயிற்றில், குடலில், ரத்தத்தில் இருக்கும் அசுத்த நீர் மேலேறித் தலைக்குப் போகிறது அந்த அசுத்த நீர், நரம்புகளின் ரந்திரங்களுக்குத் துடிப்பு உண்டாக்குகிறது. தலைவலியுள்ளவர்கள் முதலாவதாக மலச்சிக்கல் இல்லாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். இரண்டாவதாக, உடலில் பலவீனம் தோன்றினால் அதற்கு வேண்டிய சிகிச்சைகளைப் பெற்றுக் கொள்ள வேண்டும்.

இந்தத் தலைவலி உபாதைகளுக்குக் கீழ்க்கண்ட தைலத்தை உபயோகித்து வந்தால் நூற்றுக்குத் தொண்ணூறு நபர்களுக்கு நன்மை பயக்கும். தலைவலி பூரண குணமடையும். நல்லெண்ணெய் ஒரு கிலோ, நாட்டு மருந்துக் கடைகளில் கிடைக்கும் நாபி என்னும் கலப்பைக் கிழங்கு ஐம்பது கிராம், வாங்கி வைத்துக் கொள்ளவும். நாபிக் கிழங்கைச் சிறு சிறு துண்டுகளாக நறுக்கி நல்லெண்ணெய்யிலிட்டு அடுப்பேற்றிச் சிறு தீயில் காய்ச்சவும். கிழங்குத் துண்டுகள் சிவந்து எண்ணெய்யின் மேல் மிதக்கும் சமயம், எண்ணெய்யை அடுப்பிலிருந்து உடனே இறக்கி, ஒரு சிடிகை பச்சைக் கர்ப்பூரம் பொடித்துப் போட்டுக் கலக்கி விடவும். அது ஆறியபிறகு, புட்டியில் அடைக்கவும். இந்த எண்ணெய்யை வாரத்திற்கு இருமுறை தலையில் தேய்த்து ஒரு மணிநேரம் கழித்துச் சிகைக்காய் தேய்த்து வெந்நீரில் குளிக்கவும். அன்று மோர் சாப்பிடக் கூடாது. பகலில் தூங்கப்படாது. சில நாட்களில் தலைவலிகள் எல்லாம் பூரண குணம் அடைந்துவிடும்.

இது குழந்தைகளுக்கு ஓர் கொடிய வியாதி. முதாதைகள், பெற்றோர்கள் சம்பாதித்த மோக வியாதி குழந்தைகளைத் தாக்குகிறது. இதற்கு வெளிப் பூச்சுக்கு மருத்துவம் செய்வதுடன் உள்ளுக்கும் மருந்து கொடுத்தல் நல்லது.

உள்ளுக்கு மருந்து: வேப்பம் பட்டைத் தூள் ஒரு சிடிகை, பூவரசம் பட்டைத் தூள் ஒரு சிடிகை கலந்து, அரை டம்ளர் தண்ணீரிலிட்டுக் காய்ச்சிச் சுருக்கி ¼ டம்ளர் ஆனபிறகு எடுத்து வடித்துச் சீனி கலந்து, உள்ளுக்குக் காலை மாலை 20 நாட்களுக்கு ஊட்டவும்.

மேல் பூச்சுக்குத் தைலம்: தேங்காய் எண்ணெய் ½ லிட்டர், குப்பை மேனிச் சாறு ½ லிட்டர் இரண்டையும் கலந்து

வாணலிலிட்டுக் காய்ச்சவும். சாற்றினுடைய ஈரம் வற்றிச் சிடுசிடுப்பு அடங்கியவுடனே எடுத்து இறக்கி 20 கிராம் கரிமஞ்சள் தூள் அதிலிட்டுக் கலக்கி ஆறிய பின் எடுத்து வடித்துப் புட்டியில் அடைக்கவும். இந்த எண்ணெயைப் பறவை இறகால் மண்டைக் கரப்பானுக்குப் பூசி வந்தால், வெகுவிரைவில் கரப்பான் குணமாகும். உடலில் தோன்றும் சொரி சிரங்கு நமைச்சல், முட்டி வீக்கம் முதலியவைகளுக்குத் தடவிக் குளிக்கச் சில நாட்களில் பூரண குணமடையும்.

தலை சுற்றல்: இந்த வியாதி யுள்ளவர்கள் தலை கிறுகிறுப்பு என்று சொல்லுவர். இதை ஆங்கிலமருத்துவர் ரத்தக் கொதிப்பு (Blood Pressure) என்பர். இந்த வியாதி பித்தத்தினால் உண்டாவது. பித்தத்தைச் சாந்தி செய்தால் கிறுகிறுப்பு தானாகவே மறைந்துவிடும். பித்தம் அதிகமாவதால் தேயு என்னும் வன்னி அளவு கடந்து பரிணமிக்கிறது. 40வயதுக்கு மேல சாதாரணமாய் வரக்கூடும். ரத்தம் ஓரளவு கனமாயிருத்தல் வேண்டும். நரம்புகளும் தக்க வலிவுடையதாகவும் இருத்தல் வேண்டும். நரம்புகள் போதுமான அளவுக்கு ரத்த ஓட்டத்தைப் பிடித்து இயங்குகிறது. ஆனால் வயது முதிர முதிர நரம்புகள் பலவீனப்பட்டு ரத்தத்தில் நீர்ச் சத்தும் அதிகமாகிறது. ரத்தம் உடல் முழுவதும் ஓடவேண்டும். ஆனால் ஒரு அளவுடன்தான் செல்லுதல் வேண்டும். ஆனால் ரத்தம் நீராகி விட்டால், கீழும் மேலும் வேகமாய்ச் செல்லும். நரம்புகளும் ரத்தத்தை அளவுடன் பிடித்து அனுப்பச் சக்தியற்றதாய் உள்ளது. இந்த ரத்தம் வேகமாய் ஓடுவதால் தலையில் அந்த ரத்தம் ஓடும் சமயம் ஒருவித மயக்கம், தன்னை மீறிய துடிதுடிப்பு, கோபம் முதலியன உண்டாக்கும். ஆங்கில மருத்துவர்கள் இந்த வியாதி ரத்தம் அளவுக்கு மேலிருப்பதினாலுண்டாகும் பிணியென்று உடலிலுள்ள ரத்தத்தைக் குழாய் மூலம் (Syringe) எடுத்து விடுகிறார்கள். ரத்தக் குறைவினால் துன்பப்படுகிறவன் உடலிலிருந்து ரத்தத்தை எடுத்துக் கொண்டே போனால், அவன் கதி என்னவாகும் என்பதை, வாசகர்களே சிந்தித்தல் வேண்டும். சர்ப்பகந்தி (Serpina) மாத்திரைகளைப் பிரதி தினமும் சாப்பிட்டு வரச் சொல்லுகிறார்கள். ஒரு நாள் சாப்பிட மறந்தால் மறுநாளே ரத்தக் கொதிப்பு வந்துவிடும். ஆகவே இவ்வித சிகிச்சை பொருத்தமற்றது.

சிறு வயதிலும்கூட, சிலருக்கு இப்பிணி வருவதுண்டு. அதற்குக் காரணம் பலவீனந்தான். இதற்குச் சித்த மருத்துவத்தில், இரவில் படுக்கும் சமயத்தில் திரிபலா சூர்ணம் நீரில் சாப்பிடச் செய்வர். (திரி பலா—கடுக்காய்த் தோல், நெல்லி வற்றல் (கொட்டை நீக்கியது), தானிக்காய்த் தோல்).

மற்றும் காலை மாலை ஏலாதிச் சூர்ணத்தைச் சாப்பிடச் செய்வர். இந்த சூர்ணம் மருத்துவம் தெரியாதவர்கள் கூட செய்து சாப்பிடலாம்.

ஏலாதிச் சூர்ணம்:

1. ஏலஅரிசி 1 பங்கு
2. சுக்கு 2 பங்கு
3. திப்பிலி 3 பங்கு
4. அதிமதுரம் 3 பங்கு
5. சீனி 9 பங்கு

ஏலஅரிசி, திப்பிலி இரண்டையும் சட்டியில் வறுத்தெடுக்கவும். சீனியைத் தவிர மற்றவைகளைத் தனித்தனியே பொடித்து வஸ்திரகாயஞ் செய்து (சன்ன சல்லடையிலும் வடிக்கலாம்), அதனதன் அளவுப்படி கூட்டி வைத்துக் கொள்ளவும். இதைக் காலை மாலை ½ டீஸ்பூன் நீரில் சாப்பிட்டு வரப் பித்தம், கிறுகிறுப்பு வாய்க் கசப்பு முதலியன குணமாகிப் பசியையும் தூண்டும்.

—தொடரும்.



# ஸ்ரீ வைஷ்ணவ குரு பரம்பரை

திரு. கே. பட்சிராஜன், பி,ஏ., பி.எல்., திருநெல்வேலி.

(முற்றொடர்ச்சி)

உடையவராம் குருவையே தனக்குப் பரமாகக் கொண்டு ஒழுகுபவர்க்கு வீடுபேறு என்றுமே தப்பாது. "ஏத்தியிருப்பாரை வெல்லுமே மற்றவரைச் சார்த்தி யிருப்பார் தவம்" என்றபடி இறைவனையே உளங் கொண்ட குருவை உளங் கொண்டார்க்குப் பேறு நிச்சயம் என்பது ஸித்தாந்தம். ஏத்தியிருந்தார் பரதாழ்வான். அவரைச் சார்த்தி யிருந்தார் சத்துருக்கனாழ்வான். ஏத்தி யிருந்தார் நம்மாழ்வார். அவரைச் சார்த்தி யிருந்தார் ஸ்ரீமதுரகவியாழ்வார். சார்த்தியிருப்பான் திவ்விய தேசங்கள் செல்ல வேண்டியதில்லை. "இருப்பிடம் வைகுந்தம் வேங்கடம் மாலிருஞ்சோலை என்னும் பொருப்பிடம் மாயனுக்கு என்பர் நல்லோர். அவை தன்னொடும் வந்திருப்பிடம் மாயன் இராமாநுசன் மனத்து" என்றதனால் எம்பெருமானார் திருவடிகளைத் தொழவே எல்லாத் திவ்விய தேசத்தெம் பெருமானையும் தொழுதவனாகிறான். எனவே, "கர்மமும் உபாயமன்று, ஞானமும் உபாயமன்று, பக்தியும் உபாயமன்று, பிரபத்தியும் உபாயமன்று. எம்பெருமானார் திருவடிகளைப் பற்றுகையே உபாயம், அதுவே உபேயமும். நான்கு எழுத்துடைய அவரது 'ராமாநுச' என்னும் நாமமே தாரக மந்திரம். அவர் திருவடி கைங்கர்யமே பரம புருஷார்த்தம். இதுவே எனது நிச்சயமான சித்தாந்தம்" என்றார் நடாதூர் அம்மாள் என்ற ஆசிரியப் பெருமான்.

இவ்விதம் பெரும் வைபவத்தோடு எழுந்தருளி யிருந்த உடையவரைக் கந்தாடை ஆண்டான் கிட்டி, "தேவரீர் அவதரித்த புண்ய பூமியாகிய ஸ்ரீபெரும்பூதூரிலே எக்காலத்தும் எவர்க்கும் வணங்கத்தக்க முறையில் தேவரீருடைய அர்ச்சாவிக்கிரகம் ஒன்று ஏறியருளப் பண்ணவேணும்" என்று பல படியாகப் பிரார்த்தித்துக் கடைசியில் உடையவர் அநுமதி பெற்றார். கைதேர்ந்த சில்பி ஒருவரைக் கொண்டு உடையவரைப் போன்ற முக்கோலும், பன்னிரு திருமண்காப்பும், காவியுடையும் தரித்துச் சிகையுடனே பத்மாசனத்திலே கூப்பிய கையராய்க் கழுத்திலே துளஸி மணியும், தாமரைக்காய் மணிமாலையும் தவழ, அவற்றோடு யக்ஞோபவீதம் விளங்க, ஒரு விக்கிரகம் சமைக்க அதனை உடையவர் கடாக்ஷித்து ஆமோதித்து, அவ்விக்கிரகத்திலே தம் சர்வ சக்தியும் ஏறியருளுமாறு அதனைக் கட்டித் தழுவி அநுக்கிரகித்தருளினார். பின்னர் உடையவர், "இவ் விக்கிரகத்தைப் புஷ்ய மாஸத்தில் குருபுஷ்யத்திலே பிரதிஷ்டை செய்மின்" என நியமிக்க அதன்படி அந்த நன்னாளிலே உடையவரது அர்ச்சா விக்கிரகம் ஸ்ரீபெரும்பூதூரிலே பிரதிஷ்டை செய்விக்கப் பெற்றது.

அங்ஙனம் பிரதிஷ்டை செய்த நன்னாளிலே உடையவரது திவ்விய திருமேனியிலே தளர்ச்சி தோன்றியது, இத்தளர்ச்சிக்குக் காரணமென்ன என உடையவர் ஆய்ந்து கடைசியில் நமது விக்கிரகப் பிரதிஷ்டைக்கு நாம் குறிப்பிட்ட நாள் எது? என்று வினவ அங்கு அருகிலிருந்தார் அது இன்றுதான் என விண்ணப்பித்தனர். உடனே உடையவர் 'சீக்கிரமே இங்கு வருக" என்று ஆண்டவனுக்குத் திருமுகம் விடுத்தருள அவரும் வந்து சேர்ந்தார்.

அன்றிருந்தே உடையவர்க்குத் தளர்ச்சி அதிகமாகத் தொடங்கியது. அவரது அங்

ரங்கத்து முதலிகள் அனைவரும் அவர் அருகிலிருந்து அமுதனார் அருளிய இராமாநுச நூற்றந்தாதியை ஸேவித்துக் கொண்டிருந்தனர். உடையவருக்கும் நூற்றிருபது ஆண்டுகள் பூர்த்தியாயின. உடையவரும் தான் அவதாரம் செய்து காரியம் தலைக் கட்டியாயிற்று என்ற உள நிறைவு பெற்று, இவ்வுலகத்திலே வாழ்வு கசக்கலுற்றது. "சேணுயர் வானத்திருக்கும் தேவபிரானாய்", "அயர்வறும் அமரர்கள் அதிபதியாய்""பலபலவே ஆபரணம்" என்றபடி பன்மணிப்பூணாரமுடையனாய், "எழில்மலர் மாதரும் தானும் இன்பயக்க இனிதுடன் வீற்றிருந்து", "ஏழுலகும் தனிக்கோல்செல்ல" ஆள்கின்றவனாய் "ஒண்டொடியாள் திருமகளும் நீயுமே செலா நிற்ப" என்றபடி மிதுனமாய், போக பூமியிலே வைகுந்தம் கோயில் கொண்டெழுந்தருளி யிருக்கிற ஸ்ரீவைகுந்தநாதனுக்கு "சென்றால் குடையாம், இருந்தால் சிங்காதனமாம், நின்றால் மரவடியாம் நீள் கடலுள், என்றும் புணையாம் மணிவிளக்காம் பூம்பட்டாம் புல்கும் அணையாகும் திருமாற்கு" என்றபடியே பலவிதத்திலும் வழுவிலா அடிமை செய்ய வேண்டும் என்கிற அவா அவர் உள்ளத்திலே தலையெடுத்தது. அது வளர வளர "அவன் தன்னை முகப்பே கூவிப்பணி கொள்ள வேணும் அவனது செம்மா பாதபற்பை என்தலை சேர்க்க வேணும், அவனை அனுபவிக்கையாகிய ஈறில் இன்பத் திருவெள்ளத்து யான் மூழ்கவேணும், என்றெல்லாம் பலவித ஆசைகள் தோன்றின. அவற்றை நிறைவேற்றி யருளுமாறு உடையவர் "வானார்சோதி மணிவண்ணா! மதுசூதா நீ அருளாய் உன்தேனே மலரும் திருப்பாதம் சேருமாறு வினையேனே" என்று புலம்பி "இமையோர்கள் குழாம் தொழுவதும் சூழ்வதும் செய்தொல்லை மாலைக் கண்ணாரக்கண்டு "கழிவதோர் காதலுற்றார்க்கும் உண்டோ கண்கள் துஞ்சுதலே" என்றபடி கண்ணுறக்கம் நீங்கியவராய்ப் பெருமாளின் திவ்விய மங்கள வடிவை உள்ளத்தே நிறுத்தி, 'ஆபாத சூடம்' (அடிமுதல் முடிவரை) ஒவ்வொரு அவயமாக ஸேவித்து அதன் அதன் அழகிலே ஈடுபட்டுத் தோய்ந்து, 'உலகு படைத்துண்ட எந்தை அறைகழல் சுடர்ப்பூந் தாமரை சூடுதற்கு அவாவும் என் ஆருயிர் என்று பரதவித்து, திருவல்லவாழ் நகரில் நின்றபிரான் அடி நீறு அடியோம் கொண்டு சூடுவது என்று கொலோ" என்றும், மாண்குறள் கோலப் பிரான் மலர்த் தாமரைப் பாதங்கள் காண்பது எஞ்ஞான்று கொலோ என்றும் கதறி, கூவிக் கொள்ளும் காலம் இன்னும் குறுகாதோ என்று பதறித் தரிக்க மாட்டாதே அடியேன் அடைந்தேன்" என்று மனத்தால் அவனைக்கிட்டி, "உற்றேன் உகந்து பணிசெய்து உனபாதம் பெற்றேன். ஈதே இன்னும் வேண்டுவது எந்தாய்" என்று வாய்புலர்த்தி, "அடியேனுடைய ஆவி அடைக்கலமே" என்றும், "எனதாவி தந்தொழிந்தேன்" என்றும் தன் ஆன்மாவை நிவேதித்து "உனதாள் பிடித்தே செலக் காணே" என்றிரக்க அவனும், "தன் பெருங்கண்மலர்ப் புண்டரீகம்" அவர்மேல் ஒருங்கே பிறழ வைத்துக் குளிரக் கடாக்ஷிக்க, இவரும் அச்சம் நீங்கிய வியீடணாழ்வான், "இளையவற் கவித்த மோலி என்னையும் கவித்தி" என்று வேண்டிப் "பெருமாள் தொடுகழற் செம்பொன் மௌலி சென்னியிற் சூட்டிக் கொண்டான்" என்றபடியே அத்திருவடிகளைப் பற்றி 'நின்பாத பங்கயமே தலைக்கணியாய்' என்று சூட்டிக் கொண்டு "திருவாணை. 'நின்னாணை! என்னைக்கூவிக் கொள்ளாய்! என்று பற்றி அதுவே ஆருக (வழியாக) ஆழ்வார் "சூழ்விசும்பிலே" சொன்னகதியே மானஸீகமாக ஏறி மாமணிமண்டபத்தே அந்தமில் பேரின்ப அநுபவம் பெற்றார்.

அந்த மனநிலை நீங்கியதும் தம் முதலிகள் குழுவோடே யிருப்பதை உணர்ந்த உடையவர் இனிப்பொறேன். அவ்வின்பம் நிரந்தரமாக வேணும் என்று விழைவு மேலிட்டவராய் எழுந்து முதலிகளோடே பெரியபெருமாள் சந்நிதியிலே எழுந்தருளி, 'வேரிமாறாத பூ மேலிருப்பாள் வினை தீர்க்குமே' என்றபடி பெரிய பிராட்டியை ஸேவித்து; அவளைப் புருஷகாரமாக முன்னிட்டு உள்ளத்தே சரணாகதி கத்யத்தை அநுஸந்தானம் செய்தவராய், பின்னர் ஸ்ரீரங்க கத்யத்தை விண்ணப்பித்துப் பெருமாள் திருவடிகளிலே 'நகர்ம நிஷ்டோஸ்மி நசாத்ம வேதீ நபக்திமாந் த்வச்சரணாரவிந்தே; அகிஞ்சநோனன்ய

கதிச் சரண்ய த்வத்பாதமூலம் சரணம் ப்ரபத்யே" என்ற அவரது பரமகுரு ஸ்ரீ ஆளவந்தாரது பாசுரத்தை உரக்கக் கூவிப் பெருமாளைத் தெண்டனிட்டுக் கை குவித்து நின்றார். பெருமாளும் உடையவர் உள்ளக் கிடக்கை யறிந்தவராயினும் அவரை விளித்து 'உடையவரே! என்ன வேண்டி நின்றீர்?" என்று வினவ உடைய வரும் "ஸ்வாமி! சதாயுப் புருஷ;'; என்றது வேதம். அடியேனோ அக்கால வரம்பைத் தாண்டி நிற்கிறேன். "தீரா வினைகள் தீர என்னை யாண்டவனே! உனக்காட்பட்டும் அடியேன் இன்னும் இக்கொடுவுலகத்தே உழல்வதோ" என்று விண்ணப்பம் செய்து நின்றார். "பெருமாளும் தம் திருமுக மண்டலத்தே கலக்கம் படர, 'எம்பெருமானாரே! இன்னும் சில காலம் உம்மைக் கொண்டு இவ்வுலகைத் திருத்தப் பார்த்தோம். நீர் அறப்பதறி விட்டீர். உமது உள்ளம் கலக்கமடைய நாம் பொறோம். இனி உமக்குச் செய்ய வேண்டுவது என்?" என்று கேட்டருள உடையவரும் "எம்பெருமானே, நின் செம்மாபாதபற்புத்தலை சேர்த்து, வேட்கை யெல்லாம் விடுத்து என்னை உன் திரு வடியே சுமந்துழலக் கூட்டரிய திருவடிக் கண் ஒல்லைக்கூட்டுதி" என்று விண்ணப் பித்தார். பெருமாளும், "சரி! உமது திரு வுள்ளம் அதுவாயின் இற்றைக்கு ஏழாம் நாள் அப்படியே செய்வோம்" என்று திரு வுள்ளம் பற்றி யருளினார். உடையவர் 'ஸ்வாமி! அடியேனுடைய சம்பந்தி சம் பந்திகளும் அடியேன் பெற்றபேறு பெறு மாறு திருவுள்ளமாகவேணும்" என்று மிகவும் பிரார்த்திக்கப் பெருமாளும் உம்மைச் சார்த்தி யிருப்பாரும் அங்ஙனமே பெறுவர்காணும் என்று திருவாய் மலர்ந் தருளி உடையவருக்குத் தீர்த்தம் - திருப் பரியட்டம்- தமது பூவார் கழல் பிரசாதம் இவை வழங்கி விடை கொடுத்தனுப்பினர்.

உடையவரும் பெருமாளை மீண்டும் தெண்டனிட்டு விடை கொண்டு முதலிகள் அனைவரையும் அழைப்பித்துத் தாம் அது வரை வெளியிடாதே தமக்குள்ளே தேக்கி வைத்திருந்த அர்த்த விசேஷங்களை யெல் லாம் பரக்க அனைவருக்கும் வெளியிட்டரு ளினார். இவை 'எண்பத்திரண்டு வார்த்தை கள்' என்று பிரபன்னாம்ருதம் என்ற நூல் கூறும்.

---

## செய்திச் சுருக்கம்

### (1) பாராட்டு விழா :

நமது அறநிலைய ஆணையர் திரு. ஆ. இராதாகிருஷ்ணன் எம்.ஏ.,பி.எல் அவர்கள் தலைமையில், திருமயிலைக் கபாலீசுவரர் கற்பகாம்பாள் கலியாண மண்டபத்தில், புராணப் படங்கள் பல தயாரித்து மக்களிடையே தெய்வ நம்பிக்கையும் உணர்ச்சியும் ஏற்படுமாறு செய்துவரும் திரு. ஏ. பி. நாகராஜன் அவர்களுக்குத் தமிழ்நாடு தெய்விகப் பேரவையின் சென்னை மாவட்டக் குழுச் சார்பில், மாண்புமிகு உயர்நீதிமன்ற நீதிபதி திரு. சதாசிவம் அவர்களால் "தெய்வநெறிக் கலைஞர்" என்னும் பட்டம் வழங்கப் பெற்றது. திரு. மணலி இராமகிருஷ்ண முதலியார் அவர்கள் பொன்னாடை போர்த்திச் சிறப் பித்தார்கள். திருவாளர்கள் : ம. பொ. சிவஞானம். சிவாஜி கணேசன், எஸ். எஸ். வாசன், ஏ. எல். சீனிவாசன், டி. கே. சண்முகம், ஜெமினி கணேசன், ஜெய்சங்கர். திருமதி பத்மினி ஆகியோர் பாராட்டிப் பேசினார்கள். திருமதி சௌந்தரா கைலாசம் அம்மையார் அவர்கள் பாராட்டுக் கவிதை ஒன்று வாசித்தளித்தார்கள். சென்னைத் துணை ஆணையர் திரு. ஏ. சிதம்பரம், பி.ஏ.பி.எல் அவர்கள், வரவேற்புரையும், தமிழ்நாடு தெய்விகப் பேரவையின் செயலாளர் திரு. ஏ. மார்க்கண்ட வேல்ராஜன் அவர்கள், நன்றியுரையும் கூறினர். (5—11—67)

### (2) மெய்கண்டார் விழா :

தஞ்சாவூர்க் கருந்திட்டைக்குடி மீனாட்சி சுந்தரர் கோயிலில் பள்ளியகரம் நீ. கந்தசாமி பிள்ளை B.A. அவர்கள் தலைமையில் சிறப்புற நிகழ்ந்தது. அறிஞர்கள் பலர் சொற்சொழிவாற்றிச் சிறப்பித்தனர். (2—11—67)

# முதுபதி செய்தவன்

சிவஸ்ரீ தத்புருஷ தேசிகர் (பாலகவி) அவர்கள்
தேவகோட்டை

பரம்பொருளாகிய சிவபெருமான் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்து தொழில்களையும் உயிர்களிடத்து வைத்த பெருங் கருணையினால், இடையீடின்றிச் செய்து கொண்டேயிருக்கின்றார். இத்தொழில்கள் அவரால் நேரே செய்யப்பெறுவனவும். பிறரை அதிட்டித்து நின்று செய்யப் பெறுவனவுமாய் இரண்டு நிலைகளில் நிகழும்.

உயிர்களுக்கு உடம்பு, உட்கருவி, உலகம், நுகர்ச்சி ஆகியவை, மாயையிலிருந்து சிவபெருமானால் படைத்துக் கொடுக்கப்பெறும். அந்த மாயை சுத்த மாயை, அசுத்த மாயை என இரண்டு வகைப்பட்டு, அசுத்த மாயையிலிருந்து தோன்றும் பிரகிருதிமாயை ஒன்றாக, மூன்று என்ற எண்ணிக்கையிலிருக்கும். பிரகிருதிமாயை மிகவும் அசுத்தமானதாதலால், அசுத்த மாயையைச் சுத்தாசுத்த மாயையென்றும், பிரகிருதிமாயையை அசுத்த மாயையென்றும் சொல்லுவதுமுண்டு.

சுத்த மாயையில் உடம்பு முதலியவற்றைப்பெறும் தகுதியுடைய உயிர்களுக்குச் சிவபெருமான் நேராகவும், அசுத்தம், பிரகிருதி ஆகிய மாயைகளில் உடம்பு முதலியவற்றைப்பெறும் தகுதியுடைய உயிர்களுக்கு, அவர் பிறரை அதிட்டித்து நின்றும் ஐந்தொழில்களைச் செய்வார். அசுத்த மாயா புவனங்களில் அவர் செய்யும் படைப்பு முதலிய ஐந்தொழில்கள், முறையே பிரமன், திருமால், உருத்திரன், மகேசுவரன், சதாசிவன் ஆகியோர் மூலமாக நிகழும்.

"படைப்பன் அயன்; அளிப்பன் பங்கயக்கண் மாயன்;
துடைப்பர் உருத்திரனும்; சொல்லில்— திடப்பெறவே
என்றும் திரோபவிப்பர் ஈசர்; சதாசிவரும்
அன்றே அநுக்கிரகர் ஆம்"

என்பது உண்மை விளக்கம்.

இங்ஙனம் ஒவ்வொருக்கும் ஒவ்வொரு தொழிலே சொல்லப் பெறுமாயினும், பிரமன் முதலிய அவ்வவர்க்குரிய புவனங்களில் ஐந்தொழிலையும் செய்யும் உரிமை, அவ்வவர்க்கே உண்டு என்பது உணர வேண்டியதாகும். அண்ட பேரண்டங்கள் பலவற்றைத் தனித்தனியே கொண்ட இருநூற்றிருபத்து நான்கு புவனங்களில் உயிர்கள் வாழுகின்றன என்று, நமது ஞான நூல்கள் கூறுகின்றன. இவற்றுள் பிரமனைக் கருத்தாவாகக் கொண்ட புவனங்கள் நூற்றெட்டு. திருமாலைக் கருத்தாவாகக்கொண்டபுவனக்கள் ஐம்பத்தாறு. உருத்திரனைக் கருத்தாவாகக்கொண்டவை இருபத்தேழு. மகேசுவரனைக் கருத்தாவாகக் கொண்டவை பதினெட்டு. சதாசிவனைக் கருத்தாவாகக் கொண்டவை பதினைந்து.

இவ்வெல்லாப் புவனங்களையும் கடந்து இவற்றிற்கும் இவற்றின் கருத்தாக்களுக்கும் கருத்தாவாய் விளங்குபவர் பரசிவப் பெருமான். இவரொருவருக்கே ஐந்தொழிலுரிமை சுதந்திரமானது. சுத்தமாயா புவனம் உள்பட எல்லாப் புவனங்களும் ஒடுங்க வேண்டிய வேளையில், அப்புவனங்களையும் அதன் அதிபதிகளையும் தமக்குள்ளே ஒடுக்க வேண்டிய முறையில் ஒடுக்கி, மீண்டும் தோன்ற வேண்டிய

வேளையில், தம்மிடத்திலிருந்து தோன்ற வேண்டிய முறையில் தோன்றுமாறு செய்வது, முதற்கடவுளாகிய இவரது செயலாகும்.

உலகம் தோன்றி நின்று ஒடுங்குவதைக் காட்சியளவையால் அறிகின்ற நாம், அதனைச் செய்கின்ற கருத்தாவைக் கருதலளவையால் உறுதி செய்து கொள்ளுகின்றோம். "எது உள்ளது; அது தோன்றும், எது இல்லது; அது தோன்றாது" என்பதும் "எது எங்கே எப்படி ஒடுங்கிற்று; அது அங்கே அப்படி ஒடுங்கும், எது எங்கே எப்படி ஒடுங்கிற்று; அது அங்கே அப்படித் தோன்றும்" என்பதும் முதலான தருக்க உண்மைகளை உணர்ந்தவர்கள், "சங்கார காரணன் ஆகிய முதலையே முதலாக வுடைத்து இவ்வுலகம்" என்னும் பேருண்மையை ஏற்பார்கள். இதனையே "அந்தம் ஆதி என்மனார் புலவர்" என்னும் சிவஞான போத முதற் சூத்திர இறுதி வரி அறுதியிட்டு உரைத்தருளியது.

முன்பு உயிர்கள் மலத்தோடு பிரிப்பின்றியிருந்த கேவல நிலையில், அவற்றின் உய்தியில் திருவுளங் கொண்ட, அவனது "அருளல்" நிகழ்ந்தது. மும்மலச் சேர்க்கையுற்ற இப்போதைய சகல நிலையில் தோற்றம், வாழ்வு, ஒடுக்கம் ஆகியவற்றைச் செய்யும் படைப்பு, காப்பு, அழிப்பு என்னும் முத்தொழில்களும் உடல் தொடர்பு பற்றி நிகழ, மறைப்பு அருள் ஆகிய இரண்டும் உலகியல் இறையியல் ஆகிய தொடர்புகள் பற்றி நிகழ்ந்து கொண்டிருக்கின்றது. இனி மலம் நீங்கிய சுத்த நிலையில், சிவபோகத்தை நுகருமாறு செய்யும் "பேரருள்" நிகழும்.

அருளை அடிப்படையாகக் கொண்டு நிகழும் ஐந்தொழில்களும், சிவபெருமானுக்கே உரிமையுடையன வாயினும், சங்காரத் தொழிலொன்றே அவரது சிறப்புரிமைத் தொழிலென்று சொல்லப் பெறும். "எல்லாவற்றையும் ஒடுக்குவதாகிய சங்காரத்தைச் செய்கின்றவனே, எல்லாம் ஒடுங்கிய பிறகும் நிலைத்திருப்பவனாதலின், அவனே மீண்டும் எல்லாவற்றையும் தோற்றுவிப்பவனாகவும் இருக்க முடியும்" என்பது நுண்ணறிவாளர்க்கு நன்கு புலப்படுவதாகும். இவ்வுண்மையையே "போற்றியெல்லாவுயிர்க்கும் தோற்றமாம் பொற்பாதம்" என்றும் "போற்றியெல்லாவுயிர்க்கும் ஈறும் இணையடிகள்" என்றும், திருவாசகத் திருவெம்பாவை உணர்த்துகின்றது.

ஊழிக்காலங்களில் உலகுயிர்களைத் தத்துவ ஒடுக்க முறையிலும் முத்திக்காலத்தில் உயிர்களை அத்துவிதமாகவும் தம்முள் ஒடுங்குமாறு செய்யும் சிவபெருமானது முதன்மையையும் கருணையையும் திருமூலதேவநாயனார் திருமந்திரமாலைக் கடவுள் வாழ்த்துப் பத்தொன்பதாவது செய்யுளில் விளக்கியருளுகின்றார். அச்செய்யுள்

"இதுபதி ஏலம் கமழ்பொழில் ஏழும்
முதுபதி செய்தவன் மூதறி வாளன்
விதுபதி செய்தவன் மெய்த்தவம் நோக்கி
அதுபதி யாக அமருகின் றானே"

என்பதாகும்.

இறந்தவர்களின் உடலங்களை எடுத்துச் சென்று சேர்க்கின்ற இடத்துக்கு இடுகாடு—சுடுகாடு—மயானம் என்பன முதலாகிய பெயர் உள்ளன. தோன்றிய உலகம், ஒடுங்குவதற்கு முன்புள்ள, நிலையான காலத்தில், இறந்தவர்களின் உடலங்களை, இனி இறக்க இருப்பவர்கள் எடுத்துச் சென்று, அவைசேர வேண்டிய இடத்தில் சேர்த்து விடுகிறார்கள். தொகுதியான ஒரு பகுதியோ; அல்லது முழுவதுமோ ஒடுங்குகின்ற ஊழி—கடையூழிகளில், இறப்பவர் போக எஞ்சியிருப்பவர் இலராதலின், அவ் வேளைகளில் "மயானம்" என்பது எங்கோ ஓரிடத்தில் மட்டும் இருப்பதாக இல்லாமல், உயிர்த் தொகுதிகள் வாழ்ந்த உலகமனைத்துமே மயானமாகத்தானே இருந்தாக வேண்டும்?

நறுமணம் வீசுகின்ற சோலைகளென்று சொல்லத் தகுந்த இந்த ஏழு உலகங்களையும் மயானமாகச் செய்தவனாகிய பேரறிவாளன் சிவபெருமான் என்பதை இத் திருமந்திரத்தின் முதலிரண்டடிகளில் ஆசிரியர் உரைத்தருளினார். "ஏலம் கமழ்தல்" என்பது தத்துவ தாத்துவிகங்களின் தோற்ற நிலைகளையும், "பொழில்" என்பது உயிர்களின் வாழ்க்கை வளத்தையும் "ஏழும்" என்பது எண்ணிக்கைக்குள்

அடங்கிய உலகங்களையும் குறிப்பன வாகும். வாழ்வதற்குரிய உலகத்தையே சாவதற்குரிய மயானமாக ஆக்குவது, சிவ பெருமானது ஞானசத்தி வியாபாரமாத லின், அவன் இங்கே "மூதறிவாளன்" என்று குறிக்கப் பெற்முன்.

உயிர்களின் பொருட்டாகச் சிவபெரு மான் செய்யும் அழித்தற்றெழில் அவ்வுயிர் களைச் சிறிது காலம் இளைப்பாற வைக்குங் குறிப்பிலும், அருளலாகிய அநுக்கிரகத் தொழில் அவற்றை எந்நாளும் இளைப்பாற வைக்குங் குறிப்பிலும் அமைந்தவை. பல வேறு வகைப்பட்ட பக்குவங்களை உடை யனவாகவுள்ள உயிர்களை அவற்றின் அறி வுக்கறிவாயிருந்து அறிந்து, அவற்றிற் கேற்ப இளைப்பாற்றுவது, அவனது இயல் பாதலின் அவனது முதிர்ந்த அறிவு, இங்கே விதந்து பேசப்பெற்றது.

விதுபதி: சந்திரன். தேவரனைவரும் தவஞ் செய்தே தத்தம் பதவிகளைப் பெற்று வாழ் கின்றனர். பதவிகளையும் போக போக்கி யங்களையும் விரும்பிச் செய்கின்ற தவம், உண்மைத் தவமாகாது. சிவப்பேறு குறித் துச் செய்யுந் தவமே மெய்த்தவமாகும். இதனை உணர்ந்து தவஞ்செய்த பெருமை, தேவர்களுள் சந்திரனைச் சாரும். அவன் செய்த வலிமையான மெய்த்தவம் எது? அதுவே சிவபெருமானுடைய திருவடிகளை யன்றித், தனக்குப் புகலிடம் பிறிதொன் றில்லை யென்பது தெளிந்து, அவரைச் சரணடைந்து கிடந்ததாகும்.

மெய்த்தவஞ் செய்த சந்திரனுக்குப் பாதுகாப்பளித்து, அத்தவத்தையே இட மாகக் கொண்டு இறைவன் இலங்குகின்ரு னென்பதை, இத்திருப்பாடலின் இறுதி யிரண்டடிகளினுல் நாம் அறிந்து, உண் மைத் தவத்தை உறைப்புடன் இயற்றுவோ மாக.



## பாவை விழா

வரப்போகும் மார்கழி மாதத்தில், சிறுவர் சிறுமியர்கள் திருப்பாவை–திருவெம் பாவைப் பாசுரங்களை மனப்பாடம் செய்து பாடி, பாவை நோன்பு நோற்று, நல் வாழ்க் கையில் திகழ, வழக்கம்போல ஊக்கம் எடுத்துக்கொண்டு, தங்கள் தங்களுக்குப் பக் கத்திலுள்ள கிராம, நகரத்துப் பள்ளிகளிலுள்ள குழந்தைகள் இந்தத் தெய்விகத் தமிழ்ப் பாடல்களை மனப்பாடம் செய்யவும், பாவைப் போட்டிகளில் கலந்துகொண்டு பரிசுகள் பெறவும், நம் இளம் குழந்தைகளின் ஆன்மீக வளர்ச்சிக்குத் தொண்டு புரியு மாறு அன்பர்கள் அனைவரும் கேட்டுக்கொள்ளப் பெறுகின்றனர். அதற்காகப் பாவைப் பாடல்களை அச்சிட்டுக் கொடுக்க வசதியில்லாதவர்கள், பின்வரும் முகவரிக் குக் கடிதம் எழுதிப் பெற்றுக் கொள்ளலாம் :—

**" திருப்பாவை-திருவெம்பாவை மத்தியக் குழு "**
19, பெரியகடைத் தெரு,
மாயூரம்.



# தீபாவளி விழா

முன்னுரை :

ஒரு நாட்டின் நாகரிகம் பண்பாடு என்பனவற்றை யுணர்தற்கு, அந்நாட்டு மக்களாற் பெரிதும் கொண்டாடப்பெறும் விழாக்கள் பெரிதும் துணைசெய்வன ஆகும். நாகரிகம் பெற்ற ஒரு சமுதாயம் உண்மை, அழகு, அருஞ்செயல், கலைத்திறன், அமைதிநலம் ஆகிய ஐந்து பண்புகளைச் சிறப்புறக் காட்டித் திகழும் என அறிஞர் ஒருவர்* குறிப்பிட்டார். அவர் குறிப்பிட்ட ஐந்தனோடு ஆறுவதாக, அவ்வந்நாட்டு மக்கள் கொண்டாடும் பலவகைச் சமுதாயத் திருவிழாக்களையும் (Festivals) கூடச்சேர்த்துக்கொள்ளுதல் பொருந்தும்.

திருவிழாக்கள் :

திருவிழாக்கள் நாட்டு மக்களின் இன்ப வாழ்வையும், செல்வச் செழிப்பையும், கலையுணர்வையும், இனிய பழக்க வழக்கங்களையும், நன்கினிது உணர்த்த வல்லனவாகும். விழாக்கள் மக்களிடையில் அன்பையும் ஒற்றுமையும் வளர்க்கின்றன. துன்பமும் கவலையும் போக்கி, இன்பமும் உவகையும் அறிக்கின்றன.

விழா-சாறு-சிறப்பு என்பன ஒருபொருட் சொற்கள். மக்கள் அன்புடன் கூடி விழைவுடன் கொண்டாடுவது விழா; வாழ்க்கையில் இன்பங்கனிந்த பழச்சாறு எனலாம்படி பயன் நிரம்பி விளங்குவன சாறு: சுவையிலாப் பேதை மனித வாழ்வுக்கு ஓரளவேனும் சுவையூட்டி, இனிமை பெருக்கிச் சிறப்பை யளிக்கும் நிகழ்ச்சிகள் சிறப்பு! எனப் பெறும்.

சங்ககால விழாக்கள் :

சங்க நூல்களில் 'விழவுமலி மூதூர்' 'சாறயர் மூதூர்' என்னும் தொடர்கள் பலவிடத்தும் பயின்று வருதலின், பண்டைத் தமிழ்நாட்டில், பல்வேறு விழாக்கள் நிகழ்ந்து வந்தமை யுணரப்படும். 'இறையனார் களவியல்' உரையில் ஆசிரியர் நக்கீரர், பண்டை நாளில் தமிழகத்தில் நடைபெற்றுவந்த பெருவிழாக்கள் என, மதுரை ஆவணி அவிட்டம், உறையூர்ப் பங்குனி உத்திரம், கருவூர் உள்ளிவிழா என்பனவற்றைக் குறிப்பிட்டுள்ளார்.

"கழுமலம் தந்த நற்றேர்ச் செம்பியன்
பங்குனி விழவின் உறந்தையொடு
உள்ளி விழவின் வஞ்சியும் சிறிதே"

எனவரும் நற்றிணைப் பாடல் (234), இச்செய்தியினை வலியுத்தும்.

தீபாவளி விழா :

சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய காப்பியங்களால், இவ்விழாக்களைப் பற்றி மட்டுமே யன்றி, புகார் நகரில் நிகழ்ந்த இந்திர விழாவைப் பற்றியும், நாம் அறியப் பெறுகிறோம். இங்ஙனம் பழந்தமிழ் இலக்கியங்களால் உணரப்படும் விழாக்கள் பல! ஆயினும், அவற்றுள் தீபாவளியைப் பற்றிய குறிப்பு ஏதும் நமது பழந்தமிழ் இலக்கியங்களுட் காணப்படவில்லை.

தீபாவளி விழா, இந்தியா முழுவதிலும், இந்துமத மக்கள் அனைவராலும் கொண்டாடப் பெறுகின்றது. ஜைனர்கள், சீக்கியர்கள் ஆகியோரும்கூடத் தீபாவளி விழாவைக் கொண்டாடுகின்றனர். நாட்டின் பல பாகங்களில், பல மக்களால் பலகாலமாகக் கொண்டாடப்பெற்று வருவதனால், தீபாவளி விழாவைப் பற்றிப் பற்பல வகையான ஐதிகங்கள் வழங்கி வருகின்றன.

ஐப்பசி மாதத்தில் அமாவசைக்கு முன் வரும் திரயோதசி — சதுர்த்தசி — அமாவாசை—அதனை அடுத்த சுக்கிலப் பிரதமை ஆகிய நான்கு நாட்கள், தீபாவளியோடு தொடர்புடைய நாட்கள் ஆகும். இந்த நான்கு நாட்களில் திரயோதசி

* "A civilized society exhibits the five qualities of Truth, Beauty, Adventure, Art and Peace." —Prof. A. N. Whitehead, Adventures in Ideas.

யையும், சதுர்த்தசியையும் முதன்மையாகக் கொண்டு, அதில் தீபாவளி கொண்டாடுவர் தென்னக மக்கள்! அமாவாசையையும் பிரதமையையும் முதன்மையாகக் கொண்டு, குசராத்தியர் மார்வாரியர் ஆகியோர் தீபாவளி கொண்டாடுகின்றனர். அன்று அவர்கள் புதுக் கணக்குகள் தொடங்குவர்.

தீபாவளி அன்று, நாம் வைகறையில் எழுந்திருந்து, தீபம் ஏற்றி வைத்து, அதனைத் திருமகளாகக் கருதித் துதித்து வழிபட வேண்டும். எண்ணெய் வெற்றிலை பாக்கு பழம் தின்பண்டங்கள் ஆகிய வற்றைத் திருமகள் முன்பு வைத்து, நிவேதனம் செய்ய வேண்டும். திருமகளின் முன்பு வைத்து வழிபடப்பெற்ற எண்ணெயை மனைவியின் கையால் தலையில் இட்டுத் தோய்த்துக் கொள்ளுதல், திருமகளின் அருளைத் தரும். இந்த எண்ணெயில் திருமகளின் அருள் விளங்குவதாகவும், அன்று நீராடும் வெந்நீரில் கங்கை வதிவதாகவும் புராணங்கள் கூறும். அன்று விடியலிற் சூரியன் உதிக்கும் முன் எண்ணெய் தேய்த்து நீராடுவோர், கங்கையில் நீராடிய பலன்பெறுவர். அன்று அருணோதய காலத்தில் சந்திரன் உதித்த பிறகு நிற்கும் காலம் தலைமுழுகுதற்குச் சிறந்தது! பொழுது விடிந்தபிறகு தீபாவளிப் பண்டிகை கொண்டாடப் பெறும். அப்போது வகைவகையான பல இனிய சிற்றுண்டிகளைச் செய்து இறைவனுக்குப் படைத்தும், புத்தாடைகளை அணிந்தும், அன்று யாவரும் மகிழ்வர். நண்பர் உறவினர் ஆகியோர் இல்லங்களுக்குச் சென்று கலந்து பழகி மகிழ்வர். புதிய மணமக்களுக்குத் தீபாவளி மிகவும் சிறப்புடைய இன்பமான நாளாகும்.

வரலாறுகள் :

(1) தீபாவளியைப் பற்றிப் பற்பல வரலாறுகள் கூறப்பட்டு வழங்கி வருகின்றன. கண்ணபிரான், உலகமக்களுக்குப் பெருந்துன்பம் விளைவித்து வந்த நரகன் என்ற கொடிய அசுரனை வதம் செய்தபோது, அவனுடைய கடைசி வேண்டுகோளுக்கு ஏற்ப, தீபாவளிப் பண்டிகை கொண்டாடப் படுகிறது. வட இந்தியாவில் நரகாசுரனைப் போல உருவங்கள் செய்து, அவற்றைக் கொளுத்திக் கண்ணபிரானின் வெற்றியைக் கொண்டாடுவர். நரகாசுரனைக் கொன்ற நாள் சதுர்த்தசியாதலின், இது நரக சதுர்த்தசி எனப் பெறும்.

(2) பிரகலாதனுடைய பேரனும், திருமாலின் அடியவனுமாகிய மகாபலிச் சக்கரவர்த்தி முடிசூட்டிக் கொண்ட நாள் தீபாவளி என்றும், அன்று ஏற்றப்பெறும் தீபம் 'பலிதீபம்' என்றும், வாமன புராணம் முதலியன கூறுகின்றன. மகாராட்டிரப் பகுதியில் சில இடங்களில், தீபாவளியன்று பலியின் உருவம் செய்து வழிபாடு செய்வது வழக்கம்.

(3) இராமபிரான் இலங்கைக்குச் சென்று இராவணனைக் கொன்று, விபீஷணனுக்கு முடிசூட்டிவிட்டு, சீதைப் பிராட்டியுடன் அயோத்தி மாநகர் வந்து சேர்ந்த பொழுது, மக்கள் எல்லோரும் நகரத்தை அழகு செய்து இரவில் தீபம் ஏற்றிவைத்து இராமபிரான் மீது தாங்கள் கொண்டிருந்த எல்லையற்ற பேரன்பினை வெளிப்படுத்தி மக்கள் தமது மகிழ்ச்சியை விழாவாகக் கொண்டாடினார்கள். அதன் நினைவாகவே தீபாவளி விழாக் கொண்டாடப் பெறுகிறது என்றும் சிலர் கூறுவர்.

(4) ஜைன சமயத்தவர்கள் தீபாவளி விழாவைப்பற்றி வேறொரு ஐதிகம் கூறுவர். ஜைனர்களின் சிறப்பு மிக்க தீர்த்தங்கரரான மகாவீர வர்த்தமானர் பரிநிருவாணம் என்னும் வீடுபேறு எய்திய நாளே தீபாவளித் திருநாள் என்றும், தவஞானப் பேரொளியாக விளங்கியிருந்த அப்பெருஞ் சான்றோரின் மறைவினால், உலகிற்கு நேர்ந்த ஒளியிழப்பை ஈடுசெய்து நிரப்பி இருளை விலக்கி ஒழிக்கும் வகையில், அவர்தம் வழிபாட்டு நினைவாகவே அன்று ஏராளமான தீபங்கள் ஏற்றப் பெறுகின்றன என்றும், ஜைனர்கள் சாற்றுவர்.

(5) கண்ணபிரான் இந்நிலவுலகை விட்டு நீங்கிப் பரமபதமாகிய வைகுந்தத்திற்கு மீண்டு சென்று சேர்ந்தருளிய நாள் தான், தீபாவளி என்றும் கூறப்படுகிறது.

(6) இந்திய நாட்டு அரசர்களுள் மிகவும் புகழ்பெற்ற ஒருவன் விக்கிரமன் என்பவனவன். அவன் ஏற்படுத்தியதே விக்கிரம சகாப்தம் என்னும் காலக் கணக்காகும். வட இந்தியாவிலும், மேற்கிந்தியாவிலும் உள்ள இந்துக்கள் பெரும்பாலும் விக்கிரம சகாப்தத்தையே காலக் கணக்கிடுதற்குக் கையாளுவர். அத்தகைய விக்கிரம சகாப்

த்தை ஏற்படுத்திய விக்கிரமன் என்னும் வேந்தன் கார்த்திகைச் சுக்கிலப் பிரதமையில் முடிசூடிக் கொண்டான் என்றும், அதன் நினைவாகவே தீபாபளி விழாவை மக்கள் கொண்டாடத் தலைப்பட்டனர் என்றும் சிலர் கூறுவர்.

(7) புரட்டாசி மாதத்தில் (பாத்ரபதம்) தேய்பிறை நாட்களில் மகாலய தினத்தில் தென்புலத்தார் என்னும் பிதுக்கள் பிதுர் லோகங்களிலிருந்தும், நரகம் சேர்ந்தவர் நரக லோகங்களிலிருந்தும் விடுதலை பெற்று, ஐப்பசித் தேய்பிறை வரையில் நிலவுலகில் வந்து தங்கி, சுற்றத்தார் கொடுக்கும் பிண்டம் தருப்பணம் முதலியவற்றைப் பெறுவர். பின்னர்த் தத்தம் உலகங்களுக்குச் செல்வர். நரக சதுர்த்தசியன்று, சுற்றத்தார் கொள்ளியைக் கையில் கொண்டு பிதுர்க்களுக்கு வழி காட்டுவர் எனச் சிலர் கூறுவர். எமதருப்பணம் எமதீபதானம் என்னும் சடங்குகளைச் சிலர் செய்வதுண்டு.

(8) தென் தமிழ்நாட்டு மக்கள், கார்த்திகைத் திங்கள் முழுமதி இரவில் விளக்குகளை வரிசை வரிசையாக வைத்து அவற்றின் ஒளிவடிவில், எல்லாம் வல்ல முழுமுதற் கடவுளைக் கண்ணாரக் கண்டு வணங்கிவரும் வழக்கம் உடையவர். பழந்தமிழ்ச் சங்க நூல்களில் 'கார்த்திகை விளக்கீடு'- பற்றிய குறிப்புகள் பல வருதலைக் காணலாம்.

"மழைகால் நீங்கிய மாக விசும்பில்
குறுமுயல் மறுநிறம் கிளர மதிநிறைந்து
அறுமீன் சேரும் அகல் இருள் நடுநாள்
மறுகுவிளக் குறுத்து மாலை தூக்கிப்
பழவிறல் மூதூர்ப் பலருடன் துவன்றிய
விழவுடன் அயர வருகதில் அம்ம!"

என்பனபோல வரும் சங்க நூற்பாடற் பகுதிகள், கார்த்திகை விளக்கீட்டின் சீர்த்தியினை விளக்கும். தென்னகத்தில் வாழ்ந்த தமிழ் மக்களின் கார்த்திகை விளக்கீட்டினைப் போல, வட இந்தியாவில் அக்காலத்து வதிந்து வந்த தமிழ் மேன்மக்களும் ஐப்பசித் திங்களில் விளக்கு வரிசை வைத்து, அவற்றில் தோன்றும் பேரொளி வடிவினன் ஆன முழு முதற் கடவுளுக்குத் திருவிழாக் கொண்டாடி வந்தனர். அதுதான் தீபாவளி (தீபம்-விளக்கு; ஆவளி—வரிசை. 'நாமாவளி' என்பது காண்க) என வழங்கி வருகின்றது என்பது, செந்தமிழ்க் கடல் சிவத்திரு பேராசிரியர் மறைமலையடிகளார் அவர்களின் கருத்து.

முடிவுரை:

தீபாவளி போன்ற விழாக்கள், நமது நாடு முழுவதிலும் பலகோடிக்கணக்கான மக்களால் மகிழ்ந்து கொண்டாடப் பெறும் சிறப்பு வாய்ந்தனவாகும். இயல்பாகச் சுவையின்றிக் கழிந்து செல்லும் மக்களின் வாழ்க்கை நெறியில், இடையிடையே போதரும் இத்தகைய விழக்கள், ஒரு புத்துணர்ச்சியையும் மகிழ்ச்சியையும் பொலிவையும் ஏற்படுத்தி, மக்களின் வாழ்க்கைக்குச் சுவையூட்டிப் பெரிதும் நலம் பயக்கின்றன. மக்களின் உணர்வை ஈர்த்து ஒருநெறிப்படுத்தி, ஒற்றுமை உணர்வை ஊட்டி மன்பதையை வாழ்விப்பதற்கும், இத்தகைய விழாக்கள் இன்றியமையாதனவாக இருக்கின்றன.

தொன்று தொட்டு எத்தனையோ பல நூற்றாண்டுகளாகத் தொடர்ந்து வழி வழியே கொண்டாடப் பெற்று வருவதனால், இவ்விழாக்கள் பழமையும் பெருமையும் புனிதமும் தெய்விகமும் பெற்று விளங்குகின்றன. நமது முன்னோர்கள் கொண்டாடி மகிழ்ந்த இத்தகைய விழாக்களை, நாமும் கொண்டாடுவதன் மூலம், நமக்கும் அவர்களுக்கும் இடையறவு படாத ஒரு வகைப் புனிதப் பெருந் தொடர்பு, என்றும் நின்று நிலவிவர வாய்ப்பு நிகழ்கின்றது. எனவே, இன்னோரனைய விழாக்களை நாம் நம் முன்னோர்களின் அடிச் சுவட்டைப் பின்பற்றி, அன்புடன் கொண்டாடி இன்புறுவோமாக!

—ஆசிரியர்.

# கந்தபுராண நுட்பம்

**முன்னுரை :—**

சமயச் சார்பான பலவகை இலக்கியங்களுள், புராணங்கள் என்பனவும் ஒருவகையாகும். சமயத் துறையிற் புராணங்களுக்குச் சிறப்பிடம் உண்டு. ஒரு சிலர் 'புராணம்' என்னும் சொற்கேட்டமாத்திரத்திலேயே, அவற்றை மிக எளியனவாக எண்ணி இகழ்ந்துரைத்து ஒதுக்கி விடுவதுண்டு. இறையனார் களவியல் என்னும் நூலில், ஆசிரியர் நக்கீரனார் "களவு என்னும் சொற்கேட்ட துணையானே, களவு தீயது என்று இகழ்ந்து விடுதல் கூடாது. களவும் நன்றுமாறு உண்டு" எனக் கூறுகின்றார். அதுபோல, புராணங்கள் என்னும் சொல்லைக் கேட்ட அளவிலேயே, நாம் அவற்றையெல்லாம் இழிந்தனவாகவே துணிந்து கொண்டு, அறவே இகழ்ந்து ஒதுக்குதல் முறையன்று எனலாம்.

அழகென்பது பொருளில் இல்லை. அதனைக்காணும் கண்ணைப் பொறுத்தேயுள்ளது (Beauty lies in the eyes of the beholder) என்று, அறிஞர்கள் கூறுவர். அதுபோல, புராணங்களின் சிறப்பும் பிறவும், அவற்றை ஆய்ந்துணர்ந்து பயன் கொள்ளும் நம் அறிவின் திறனுக்கும் நலனுக்கும் ஏற்பவே அமைவன ஆகின்றன.

**புராணங்கள் :**

'புராணம்' என்பது புராதனம் (பழைமை) என்னும் சொல்லின் அடியாக அமைந்தது என்பர் அறிஞர். எனவே, பழைய காலந்தொட்டு வழங்கிவரும் வரலாறு (தொல்கதை)களே புராணங்கள் எனப்பெயர் பெற்றன எனக் கொள்ளுதல் பொருந்தும். புராணங்கள் பதினெட்டு என அறிஞர்கள் புகலுவர்.

அவற்றுள், சைவம் பவிடியம் மார்க்கண்டேயம் இலிங்கம் காந்தம் வராகம் வாமனம் மச்சம் கூர்மம் பிரமாண்டம் என்னும் பத்தும் சிவபிரானுக்குரிய புராணங்கள் ஆகும்; பிரமம் பதுமம என்னும் இரண்டும் பிரமதேவனுக்குரிய புராணங்கள்; கருடம் நாரதம் பாகவதம் விஷ்ணு என்னும் புராணங்கள் நான்கும் திருமாலுக்கு உரியவை; ஆக்கினேயம் என்பது அக்கினி தேவனுக்கு உரியது; பிரமகைவர்த்தம் என்பதோ சூரியனுக்கு உரிய புராணம் ஆகும்.

**புராணங்களின் இயல்பு :**

இங்ஙனம் புராணங்கள் பதினெட்டு எனப் பொதுவாகக் கூறப்படுமாயினும், இவற்றுள் மிகவும் சிறப்புடையனவாகப் பெரிதும் போற்றி வழங்கப்பெற்று வருவன ஒரு சிலவே யாகும். அவற்றுள்ளும் கந்த புராணம் என்பது, மிகவும் சிறப்புடைய ஒன்றாகும்.

சமயத்துறையில் புராண இலக்கியங்கள் மிகப்பெரிதும் போற்றப் பெறுகின்றன. புராணங்கள் மிக நுண்மைத் தன்மை வாய்ந்த கருத்துக்களை யாவரும் உணரும்படி, பருமை மிக்க வடிவில் விளக்குகின்றன. அருவமும் கடினமும் ஆன செய்திகளை விளக்க, அவற்றுக்கு ஓர் உருவம் கொடுத்து, எளிய இனிய கதைகளாக ஆக்கிக் கூறுகின்றன. மனித வாழ்வியலின் உண்மைகளையும் அனுபவங்களையும், சுவைமிக்க அழகிய கவிதைகளில், அரிய முறையில் அறிவுறுத்தும் பழம்பெரும் இலக்கியங்களே புராணங்கள் எனலாம்.

புராணங்கள் இறைவனது பெருமையினையும், இறையருளின் திறனையும் விளக்குவதோடு, ஒழுக்கநெறியில் தவறுதலாகிய குற்றம் முதலியன எய்தாதபடி,

உயரிய பல நீதிகளையும் செய்திகளையும், மக்கள் உளங்கொளப் புகட்டுகின்றன.

வேதப் பொருளை உள்ளபடி அறிவது மிகவும் கடினம். மழைத்துளி சிப்பியின் வயிற்றில் விழுந்தால் முத்தாகின்றது. நெருப்பில் விழுந்தால் சுவறிப் போகின்றது. பிற இடங்களில் விழுந்தால் அவ்வவற்றிற் கேற்ப அமைகின்றது. அதுபோல, வன் சொற்களினுற் புணர்க்கப்பட்ட வேதங்கள் அவ்வவர்தம் வினைக்கேற்பப் பலர்க்கும் பல வகையிற் பொருள் கொள்ளக் கிடக்கும். எனவே, அவற்றின் உண்மைப் பொருளை யுணரப் புராணங்களின் துணை இன்றி யமையாத தாகின்றது. இவற்றுலும் புரா ணங்களின் சிறப்புடைமையை நாம் இனி தறிந்து கொள்ளலாம்.

**கனிவுரை :**

வேதம் எஜமானன் கட்டளை இடுவது போல்வது. "சத்தியம்வதா தர்மம் சரா" (உண்மையே பேசுக; அறநெறியிலே நடக்க) என வேதம் கட்டளையிடும். மனி தர்கள் செய்யத் தக்கனவற்றை விதித்தும், செய்யத் தகாதனவற்றை விலக்கியும் கட் டளை இடும் முறையில், வேதங்கள் அமைந் துள்ளன. ஆதலின் அவற்றை அலங்கார நூலார் அரும்பெருந் தலைவனின் ஆணை யுரை (ப்ரபுசம்ஹிதை) என்பர். அன்பிற் சிறந்த நண்பர்கள் தமக்குள் அகங்கலந்து நின்று அளவளாவி மகிழ்ந்து உரையாடு வது போல்வன, இதிகாசங்கள். ஆதலின் அவற்றை நண்பர்களின் நயவுரை (சஹ்ருத் சம்ஹிதை) என வழங்குவர். மனைவி கண வன்பால் இனிமை பெருகக் கலந்துரை யாடி, அவனைத் தன் கருத்திற்கு இணங்கச் செய்யும் காதற் கனிவுரைபோல, வேதங் கூறும் விதிவிலக்குகளைச் சுவைபெருகச் சொல்லி இன்பம் பயந்து, அவற்றை யாவரும் அகமகிழ்ந்து கடைப்பிடிக்கச் செய்யும் தன்மை வாய்ந்தவை, புராணங் களே யாம். ஆதலினுல் புராணங்களை மனைவியின் கனிவுரை (காந்தா சம்ஹிதை) என அறிஞர்கள் புகலுவர். கசப்பு மருந்தை உண்ண மறுப்பவனுக்கு, அவன் விருமபி யுண்ணும்படி அதனமீது தேனும் சருக்கரையும் தீற்றித் தருதல் (குளஜிஹ்வா ந்யாயம்) போல, இனிமை பயவாத பொருள்களையும் இன்பம் பெருக நன் கினிது இயம்ப வல்லன, புராணங்களே எனலாம்.

**புராணங்களின் சிறப்பு :**

இச்சிறப்பியல்பில் இந்தியப் புராணங் கள் மிகவும் தலைசிறந்து விளங்குகின்றன. அவைகள் செழித்தோங்கிப் பரந்து விரிந்து, சிறந்த அழகுடனும், நிறைந்த வளத்துடனும் மிளிர்கின்றன. அவைகளை நாம் உணர உணர அவற்றின் ஒளிமிக்க கன்வுகளும், உயரிய இனிய கற்பனைகளும், நம்மனோர்க்கு வியப்பும் விம்மிதமும் விளை விக்கின்றன. அவற்றிற்கு அழகிய உருவம் கொடுத்த நம் முன்னோர்களின் நுண்மாண் நுழைபுலத்தினை வெளிப்படுத்துகின்றன.*

தாளாண்மை (முயற்சி) இல்லாதவர்கள் வேளாண்மை (உழவு தொழில்) செய்வ தும், வாளாண்மை இல்லாதவர்கள் போரில் வெற்றி பெறுதலை விரும்பிப் போர்க்களத் திற்குச் செல்லுவதும், புராணங்களைப் படித்தும் கேட்டும் அறியாதவர்கள் அறம் பொருள் இன்பங்களின் முடிந்த பயனுகிய வீடுபேற்றை அடைய விழைவதும், கண் ணில்லாத குருடர்கள் வழியறிந்து நடந்து செல்ல இயலாது இடர்ப்படுதல் போல, இடர் விளைவிக்கும் பயனில் செயல்களேயா கும். இதனுல், மக்கள் தம் வாழ்க்கையில் சமய உணர்வு எய்தி இறையருள் நெறியில்

தாளாண்மை இல்லாதார் வேளாண்மை
செய்குவதும், தரைமேல் என்றும்
வேளாண்மை இல்லாதார் மனைவாழ்க்கை
செலுத்துவதும், விசயம் வேட்டு
வாளாண்மை இல்லாதார் மண்டுசமர்க்கு
ஏகுவதும், வளர்பு ராணம்
கேளாதார் கதிவிழைவும்; விழியில்லார்
வழிநடக்கும் கிரமம் ஆமால்!

—திரிகூடராசப்பக் கவிராயர்.

* "Indian mythology is richer, vaster, very beautiful, and full of meaning. I have often wondered what manner of men and women they were who gave shape to these brightest dreams and lovely fancies, and out of what gold mine of thought and imagination they dug them."

—**Sri Jawaharlal Nehru,**
***The Discovery of India, p. 66.***

நின்று, வாழ்வாங்கு வாழ்ந்து மகிழ்வதற்கு வழிகாட்டும் வான் பொருள்களாக வயங்குவன, நம்முடைய பெரியவர்கள் வகுத்தளித்துப் போந்த சிறந்த புராணங்களே என நாம் நன்கினிது தெளியலாம்!

**கந்தபுராணம் :**

கந்த புராணம், புராணங்களில் மிகவும் சிறப்புடைய ஒன்று. கவிதைச் சுவை மிக்கது; சாத்திரக் கருத்துக்களும் தத்துவ நுட்பங்களும் செறிந்தது; பயில் தொறும் நூல்நயம் பயப்பது; இறையுணர்வை இனிது வளர்ப்பது; பக்தி யுணர்வையும் ஒழுக்கத்தையும் பரப்புவது. தமிழிற் கச்சியப்ப சிவாசாரியர் இயற்றியருளிய கந்தபுராண நூலில், இலக்கியச் சுவைகள் அனைத்தும் நலக்கப் பொருந்தியுள்ளன.

புராணங்களைப் பயிலுங்காலும் கேட்குங்காலும் அவற்றின் நுட்பங்களை நாம் உணர்ந்து கொள்ளுதல் வேண்டும். வெறுங்கதை நோக்காது அவற்றின் கருத்தையே நோக்குதல் வேண்டும். கருத்தை விளக்குதற்கே கதை போந்தது. கதை உடலும், கருத்து உயிரும் ஆகும். சிலர் கதையை மட்டும் பிடித்துக் கொண்டு கருத்தை விட்டுவிடுவர். அவர்தம் செய்கை 'நெய்யரி' போல்வதேயாகும். நுட்பமான (Abstract ideas) அரும் பெருந் தத்துவக் கருத்துக்களை, யாவரும் இனிதுணர்தற் பொருட்டுப் பெரியோர்கள் பருவடிவில் (Concrete forms) அழகுற அமைத்து, விளக்கி யுதவியனவே புராண கதைகள். எனவே, கலைத்திறம் மிக்க அவற்றின் கருத்து நுட்பங்களை ஆராய்ந்துணர்தலே, நம்மனோர்க்கு இன்றியமையாக் கடமையாகும். ஆதலின், கந்தபுராணத்தின் நுட்பங்கள் சிலவற்றை ஈண்டு இயன்ற அளவில் ஒருசிறிது காண்போம்.

## (1) தட்ச காண்டம் :

கந்தபுராணம் ஆறு காண்டங்களை உடையது. உற்பத்தி காண்டம், அசுர காண்டம், மகேந்திர காண்டம், யுத்த காண்டம், தேவ காண்டம், தட்ச காண்டம், என்பன அவை. இது நூலின் அமைப்பு முறை. எனினும், வரலாற்று முறைக்கு ஏற்ப முதற்கண் ஆராயத் தக்கது, தட்ச காண்டமே ஆகும். தட்சன் பிரமதேவரின் புதல்வன். பிரமதேவர் இறைவனின் அருளியல்புகளையும், தவத்தின் சிறப்பினையும் தட்சனுக்கு உபதேசிக்கின்றார். சிவபிரானை வழிபட்டலலது எவரும் வீடுபேறு எய்துதல் இயலாது என அறிவுறுத்துகின்றார்.

பரசிவன் உணர்ச்சி யின்றிப்
பல்லுயிர்த் தொகையும் என்றும்
விரவிய துயர்க்கு ஈறு எய்தி
வீடுபேறு அடைதும் என்றல்,
உருவமில் விசும்பின் தோலை
உரித்துடுப் பதற்கொப் பென்றே
பெருமறை இயம்பிற் றென்னில்
பின்னும்ஓர் சான்றும் உண்டோ?

அது கேட்டுத் தட்சன் தவம் புரிகின்றான். இறைவன் வெளிப்பட்டபோது. பேராற்றலும் பெருந்தலைமையும் பெற்ற அவன், அம்பிகை தனக்கு மகளாகத் தோன்ற வரம் கேட்கின்றான். அதனால் இறைவன் தனக்கு மருமகனாக வருவான்; தான் அவனிலும் பெரியவனாகலாம் என மனக்கோட்டை கட்டினான். "கெடுவான் கேடு நினைப்பான்". தனது கற்பனை நிறைவேறாத நிலையில் தட்சன் இறைவனைப் பகைத்தான். ததீசி முனிவர் ஆகிய சான்றோர், எவ்வளவோ அறவுரைகள் பகர்ந்தும் கேளாமல் இகழ்ந்தான். சிவபிரானைப் புறக்கணித்துப் பழித்தான். தீய வேள்வி செய்தான். தேவர்களும் முனிவர்களும் ஒருவகையில் அவனுக்கு உடனிருந்து துணை புரிந்தனர். அதனால் வீரபத்திரர் தோன்றி வேள்வியை அழித்தார். தவத்தால் உயர்ந்த தட்சன், இறுமாப்புக் கொண்டதனால் இழிவுற்றான். சான்றோர்களின் அறிவுரைகளைக் கேளாமையால், இழிந்து கேடுற்றான். சிவநிந்தை புரிந்த அவன், ஆட்டுத்தலை அடைந்து அவதியுற நேர்ந்தது. தீய வேள்வி புரிந்த தட்சன், தான் தண்டனை பெற்றதே அன்றி, தனக்கு உடனிருந்து துணைபுரிந்த பிறருக்கும் தீங்கு விளைவித்தான். குற்றம் செய்தவன், செய்யத் தூண்டியவர், உடனிருந்தவர் ஆகிய அனைவரும் தண்டிக்கப் பெற்றனர். இது நமக்கு என்றும் நினைவில் இருத்தற்குரிய சிறந்த செய்தியாகும். இக் காண்டத்தில் சிவபிரானைப் பற்றிய பலவேறு வரலாறுகளும் ஒருங்கே திரட்டித் தொகுத்

தளிக்கப்பட்டுள்ளன. 'அகந்தை கொண்டவன் அழிவான்' என்பது தட்சன் வரலாற்ருல் தெரிகின்றது.

## (2) அசுர காண்டம் :

இப்பகுதியில் சூரபதுமன்-சிங்கமுகன்-தாரகன் முதலிய அசுரர்களின் தோற்றமும் ஆட்சியும் பற்றிய செய்திகள் கூறப்படுகின்றன. சிவநிந்தை புரிந்த தட்சனேடு சேர்ந்ததனுலாய தீய விளைவைத் தேவர்கள் அனுபவிக்க நேர்ந்தது. அவர்களைத் துன்புறுத்துதற்கென்றே அசுரர்கள் தோன்றினர். தேவர்கள் பலரும் பற்பல நோக்கம் கொண்டு தட்சன் வேள்விக்குச் சென்றனர். ததீசியாகிய சிவனடியாரை அவமதித்தனர். அவர் கூறிய அறிவுரைகளைப் புறக்கணித்தனர். சிவநிந்தையும் சிவனடியார் நிந்தையும் புரிந்தனர். சிவாபராதம் பிராயச்சித்தத்தால் தீராது. அதனை அனுபவித்தே தீர்க்க வேண்டும். பாவத்தை மகிழ்ச்சியுடன் செய்தலும், பின்னர்த் துன்பம் வந்தால் அழுதலும் கூடாது.

வினைப்பயனைத் தேவர்களே ஆயினும் எய்தாமற் கழித்தல் இயலாது. வினைப் பயனினின்றும் விலகித் தப்பிததுக்கொள்ள ஞானிகள் கருதார். அவற்றை அனுபவித்துத் தீர்த்துவிடவே ஞானிகள் விரும்புவர். வினை அனுபவத்தில் நமக்கு மறதி உண்டாகுமாறு இறைவன் தன் பேரருளால் செய்கின்ருன். தவறு செய்தால் கொடியவர்களை அடித்துத் திருத்தவும், நல்லவர்களை அணைத்துத் திருத்தவும் வேண்டும். இறைவன் இவ்வாறு செய்தலேயே மறக்கருணை, அறக்கருணை எனச் சாத்திரங்கள் கூறுகின்றன. இறைவனுக்கு அசுரரும் தேவரும் ஒன்றே! எல்லா உயிர்களும் அவன் பிள்ளைகளே! ஆதலின் அவனுக்கு நல்லார் பொல்லார் என்ற பாகுபாடு இல்லை. தவ முயற்சியால் நாம் நலமனைத்தும் பெறலாம். 'ஒன்னுர்த் தெறலும் உவந்தாரை ஆக்கலும் எண்ணில் தவத்தான் வரும்'. வாழ்வு ஒரு காலம், தாழ்வு பிறிதொரு காலம். இவை மாறி மாறிச் சகடக்கால் போல வரும். முன்பொரு சமயம் தேவர்கள் உயர்ந்து அசுரர்களைத் துன்புறுத்தினர். இப்போது அசுரர்கள் வலிமையுற்றுத் தேவர்களை வருத்த முற்படுவாராயினர். 'பிறர்க்கின்னு முற்பகல் செய்யின் தமக்கின்னு பிற்பகல் தாமே வரும்'.

சூரபதுமன் பெருந்தவம் புரிந்தான். நெருப்பில் விழுந்து உயிர்விடத் துணிந்தான். அவனுக்கு உடல் உணர்வு இல்லையாகி இறையுணர்வே நிரம்பி நின்றபோது சிவபெருமான் வெளிப்பட்டருளினுர். சூரபதுமன் பிறர் எவரும் பெருத பெரு வரங்கள் பல பெற்ருன். சூரனுக்குத் தந்தை காசிப முனிவர்; தாய் அசுரப்பெண். தந்தையின் இயல்புக் கேற்பத் தவம் புரிந்தான். தாயின் பண்பைத் தழுவி அசுரத் தன்மையில், பிறரை அடக்கியாள வரங்கள் பெற்ருன். தந்தை தாயரின் குணங்களே மைந்தர்கள்பாலும் அமைந்து நிற்கும். இவ்வுண்மை உணர்ந்து பெற்ருேர்கள் நடந்துகொள்ளுதல் வேண்டும். சூரனின் ஆட்சியில் தேவர்கள் பல பெரும் துன்பங்கள் உற்றனர். சிவாபராதமாகிய அழுக்கு நீங்கும் வண்ணம், அசுரர்களாகிய கொம்பால், தேவர்களாகிய ஆடையினை, சிவபிரான் வலிதில் கசக்கி அடிக்க நேர்ந்தது. 'தன் வினை தன்னைச் சுடும்', 'தினை விதைத்தவன் தினையை அறுப்பான், வினை விதைத்தவன் வினையை அறுப்பான்' என்னும் உண்மை, அசுரர்கள்பால் தேவர்கள் பட்ட கொடுமையால் புலப்படுத்தப் பெறுகின்றது.

## (3) உற்பத்தி காண்டம் :

தேவர்களுக்கு வந்த துன்பத்தை நீக்குதற்குச் சிவபிரான் திருவுளங்கொண்டருளும் செய்திகளை, இப்பகுதி கூறுகின்றது. தண்டனை அளித்த இறைவனே தண்டனையை நிறுத்தி விலக்க முற்படுகின்ருன். அடித்தாலும் அணைத்தாலும் அவனே துணை. 'நன்றே செய்வாய் பிழை செய்வாய் நானே இதற்கு நாயகமே' என்பர் மணிவாசகர். தண்டனையை அளித்த சிவபிரானே, அதனை நிறுத்தி விலக்கி அருள்புரிய, முருகனுய் வந்தான். முருகனின் தோற்றம் பற்றிக் கூறுவதனுலேயே இது உற்பத்தி காண்டம் எனப் பெயர் பெற்றது. நாம் வினையால் பிறக்கின்ருேம். முருகன் அருளால் பிறந்தான். நாம் நம் விருப்பங் காரணமாகப் பிறக்கவில்லை,

முருகனே தானே விரும்பித் தோன்றினன். நாம் பிறப்பதனல் துன்பமுறுகின்றோம். முருகன் தன் தோற்றத்தினல் அனைவருக்கும் இன்பத்தைத் தந்தருள்கின்ருன்.

முருகனின் தோற்றம் பற்றிய உண்மைகள், நினைந்து நினைந்து வியந்து மகிழ்தற்குரியன. பிள்ளைப்பேறு தவத்தினல் வாய்த்தல் வேண்டும். நல்ல தாய் தந்தையர்களுக்கே நல்ல குழந்தைகள் பிறக்கும். குழந்தைகளைச் சையோகத்தால் அன்றித் தவயோகத்தால் பெறுதல் வேண்டும். நல்ல மனைவி வாய்க்க ஆடவரும், நல்ல கணவன் கிடைக்க மகளிரும் தவம் புரிதல் வேண்டும். சிவபிரான் தட்சிணமூர்த்தியாக இருந்து தவம் புரிந்தார். அம்பிகை மலைமகளாக உதித்துத் தவஞ்செய்தார். இருவரும் தவம் புரிந்தே ஒருவரை ஒருவர் மணந்தனர். இது நாம் நம் கருத்தில் இருத்துதற்கு உரியது. கணவனும் மனைவியுமாகக் கடிமணம் புணர்தலின் பயன் நன்மகப்பேறு எய்துதலே ஆகும். உலகு உய்யவும் உவப்பவும் நாம் மக்களைப் பெறுதல் வேண்டும். 'தம்மிற்றம் மக்கள் அறிவுடைமை மாநிலத்து மன்னுயிர்க்கெல்லாம் இனிது! புலன்களுக்கு அடிமையாகிக் காமவயப்பட்டு மக்களைப் பெறுதல் முறை அன்று. புலன்களை அடக்கி வென்று தவநலத்தால் மகப்பேறு அடைதலே பெரும் சிறப்பாகும். சிவபிரான் **'காமதகனம்'** செய்த பின்னரே **'குமார சம்பவம்'** நிகழ்ந்தமை உன்னி உணரற்பாலது.

முருகன் சிவபிரானின் கண்ணில் இருந்து ஒளிப்பிழம்பாக வெளிப்பட்டார். அநதக்கண் காமனை வென்று எரித்து ஒழித்த கண். விந்துவானது ஊர்த்துவ வீரியம் (மேல் நோக்கியது), அதோ வீரியம் (கீழ் நோக்கியது) என இருதிறப்படும். உயிர்களாகிய நாம் அதோ வீரியம் உடையவர்கள். சிவபிரான் ஊர்த்துவ வீரியம் உடையவர். நாம் நம் ஆற்றலைக் கீழ் நோக்கிற் கழிய விடாமல் புனிதப்படுத்தி உயர் நோக்கிற்குப் பயன் படுத்துதல் வேண்டும். அதுவே தவநலம் ஆகும். அதனற் பிறக்கும் மகவே உலகை உய்விக்கும். காமனை வென்ற கண்ணினின்று முருகன் ஞானப் பேரொளியாக வெளிப்பட்டார். உலகை உய்வித்து வாழ்வித்தார்.

சூரன் இருள், முருகன் பேரொளி. இருளை அழிக்க ஒளியால்தான் இயலும். முருகனின் தோற்றம் ஐந்து பூதங்களிலும் நிகழ்ந்தது. முன்னரே சிவபிரான்பால் ஒடுங்கியிருந்த முருகன் என்னும் சிவசக்தி வெளிவருதற்கு, அசுரர்களின் தீவினையும் தேவர்களின் வேண்டுகோளும் காரணமாயிற்று. தந்தையிலும் மைந்தன் சிறப்புடையவனுதல் விரும்பத் தக்கது. ஐம்முகச் சிவனுக்கு, அறுமுகச் சிவனுக முருகன் அவதரித்தான்.

அருவமும் உருவும் ஆகி
 அநாதியாய்ப் பலவாய் ஒன்ருய்ப்
பிரமமாய் நின்ற சோதிப்
 பிழம்பதோர் மேனி ஆகிக்
கருணைகூர் முகங்கள் ஆறும்
 கரங்கள்பன் னிரண்டும் கொண்டே
ஒருதிரு முருகன் வந்துஆங்கு
 உதித்தனன் உலகம் உய்ய!

மறைகளின் முடிவால் வாக்கால்
 மனத்தினல் அளக்கொ ணமல்
நிறைவுடன் யாண்டும் ஆகி
 நின்றிடும் நிமல மூர்த்தி
அறுமுக உருவாய்த் தோன்றி
 அருளொடு சரவ ணத்தின்
வெறிகமழ் கமலப் போதில்
 வீற்றிருந் தருளி னனே.

— கந்தபுராணம்

## (4) மகேந்திர காண்டம் :

முருகன் மால் அயன் மகவான் முதலிய தேவர்கள் பலரும் வந்து முறையிட்டுக் கொள்ள, அவர்களுக்கு ஆறுதல் கூறி வீரவாகு தேவரைச் சூரபதுமனின்பால் தூது அனுப்புவதும், அவர் சூரபதுமனது மகேந்திரபுரிக்குச் சென்று தூதுரைத்து மீள்வதும், ஆகிய பல செய்திகளைச் சொல்லுகின்றது. இதன் தொடக்கப் பகுதியில் முருகன் சூரபதுமனின் வரலாற்றைக் கூறுமாறு இந்திரனைப் பணிக்கின்ருர். அஃது அறியாமையா லன்று. அழுகின்ற பிள்ளையைத் தந்தை முதலில்

என்ன நேர்ந்தது என்று விசாரித்து, அழுகையைச் சமனப்படுத்திப் பின்னர்த் தின்பண்டம் முதலியன தந்து உவப்பித்ததைப் போல, முருகன் புரிந்த கருணைச் செயல் அது! முருகன் பணித்தபடி இந்திரன் சூரபதுமனின் வரலாற்றைத் தான் சொல்ல முற்படாமல், பிருகற்பதியைக் கொண்டு சொல்லுமாறு செய்வித்தான். இங்ஙனம் தனது குருவைக்கொண்டு சொல்லுவித்தமை, "இதனை இதனால் இவன் முடிக்கும் என்று ஆய்ந்து அதனை அவன்கண் விடல்" என்பது பற்றியாம்.

முருகன் பின்னர் வீரவாகுவைத் தூது அனுப்பியது, முருகனின் கரையற்ற பெருங்கருணையை உணர்த்துவதாகும், எவ்வளவுதான் பிழைகள் புரிந்த போதிலும், எத்துணைதான் கொடியவர்களாக இருப்பினும், எடுத்த எடுப்பிலேயே எவரையும் தண்டித்து விடுதல் கூடாது; சாம பேத தான தண்டம் என்னும் நால்வகை உபாயங்களையும் படிமுறையே பின்பற்றுதல் வேண்டும் என்பது நீதி நெறி. இன்சொற் கூறுதல், வேறுபடுத்திப் பிரித்தல், நன்கொடையளித்தல் முதலிய உபாயங்களால், பகைவரைத் திருத்தப் பலவகைகளில் முயலுதல் இன்றியமையாதது. இவையாவும் பயன் தராத வழியே தண்டனை முறையாற் பகைவர்களைச் சாடி அழித்தல் வேண்டும்.

மற்றுமொன்றும் கருதுதற்கு உரியது, "தாம் வளர்த்ததோர் நச்சுமா மரம் ஆயினும் கொலார்" என்பது மணிவாசகம். அம்முறையில் சிவபிரான் அருளால் சூரன் பெற்ற பேராற்றல்களையும் பெருநலங்களையும், சிவபிரானின் வேறல்லாத மைந்தராகிய தாமே விரைந்து அழித்தொழித்தற்குத் திருவுளம் கொண்டிலன் முருகன்!

ஆயிரத்தெட்டு அண்டங்களை நூற்றெட்டு யுகங்கள் அரசோச்சிய சூரனின் திருவும் செல்வமும் உருவறியா வண்ணம் அழிந்தொழியப் போகின்றனவே என்னும் கழிபேரிரக்கமும் கண்ணோட்டமும் பற்றியும், எடுத்த எடுப்பிலேயே போருடற்றி அவனைக் கொல்ல முற்பட்டிலன் முருகன்! இப்பொழுதாயினும் இவன் திருந்தி உய்ய மாட்டானா? என்னும் இரக்க உணர்வினாலேயே, அவன்பால் வீரவாகு தேவரைத் தூதுரைத்து வர ஏவினன் முருகப் பெருமான்.

மறைந்து போயசூர் முயற்சியை
மன்னுயிர் தோறும்
உறைந்த நாயகன் கண்டனன்;
ஒருதனிச் செவ்வேல்
எறிந்து மற்றவன் உயிர்கொள
நினைந்திலன்! இன்னும்
மறிந்து தீயவன் உய்யுமோ
எனும்திரு அருளால்!

பண்டை நாளில் மறத்துறையினும் அறமே நிகழும். இப்பகுதியில் வீரவாகுவின் வீரமும், தூதின் திறமும் செவ்விதின் விளக்கப்பட்டுள்ளன.

"கோலம் நீடிய நிதிபதி
வாழ்க்கையும் குறியேன்;
மேலை இந்திரர் அரசினைக்
கனவினும் வெஃகேன்;
மால்அயன்பெறு பதத்தையும்
பொருளென மதியேன்;
சால நின்பதத் தன்பையே
வேண்டுவன் தமியேன்"

என்பது முருகன்பால் வீரவாகுதேவர் வேண்டும் வரம். இறைவன்பால் இறவாத இன்ப அன்பைப் பெற்றால், பின்னர் அது கொண்டே யாவற்றையும் பெறலாம். இவ்வுண்மையுணராது, வேருக்கு நீர் பாய்ச்சாமல் வெறும் இலைக்கு நீர் தெளிப்பவர்கள் போல, நாம் அன்பை விட்டுவிட்டுப் பிறவற்றையே இறைவன்பாற் கேட்கின்றோம்.

## (5) யுத்த காண்டம்:

வீரவாகு தூதுசென்று அறிவுரைகள் பகர்ந்தும், பானுகோபன் சிங்கமுகன் முதலிய பலர் முருகனின் பெருமைகளை எடுத்துச் சொல்லியும் கேளாமல், சூரன் போர்புரிந்து மடிவதற்கே துணிந்து நின்றான். "ஊழிற் பெருவலி யாவுள" என்பது பொய்யாமொழி யன்றோ!

பேரெழில் இளமை ஆற்றல்
பெறலரும் வெறுக்கை வீரம்
நேரறு சுற்றம் யாக்கை
யாவையும் நிலையா அன்றே !
சீர்எனப் பட்ட தன்றே
நிற்பது ? செறுநர் போரில்
ஆருயிர் விடினும், வானோர்
அருஞ்சிறை விடுவ துண்டோ ?

இறந்திட வரினும், அல்லால்
இடுக்கண்ஒன் றுறினும், தம்பால்
பிறந்திடும் மானம் தன்னை
விடுவரோ பெரியர் ஆனோர் ?
சிறந்திடும் இரண்டு நாளைச்
செல்வத்தை விரும்பி, யானும்
துறந்திடேன் பிடித்த கொள்கை ;
சூரன்என் றொருபேர் பெற்றேன்.

முருகன் ஓர் இமைப்பொழுதில் சூரனைக் கொல்லும் வல்லமை உடையவர். அவர் நினைத்திருந்தால், தமது ஒரு சிறு புன் முறுவலினாலேயே அவனை அழித்திருத்தல் இயலும். எனினும் ஒருவகையில் அவனைப் பெருமைப் படுத்தும் முறையில், அவனுடன் போர்புரிவது போலச் சிறிது திருவிளை யாடல்கள் புரிந்தார்.

சூரனே முதலோர் தம்மை
இமைப்பினில் தொலைக்க உன்னின்,
மூரலால் அடுவன் ; கொண்ட
முனிவினால் அடுவன் ; வாய்மைச்
சீரினால் அடுவன் ; நாட்டச்
செய்கையால் அடுவன் என்றால்,
நேரிலா முதல்வன் வன்மை
யாவரே நிகழ்த்தற் பாலார் !

பொருசமர் விளைப்பான் போலப்
பொருக்கெனப் போந்து சூரன்
இருவிழி தன்னிற் காண்பான்
எளிதுதன் வடிவம் காட்டி
அருளது புரிந்தான் என்னின்,
ஆதியங் குமரன் மாயத்
திருவிளை யாடல் யார்க்கும்
தெரிகில போலும் அன்றே !

யுத்தகாண்டம் முருகனது வேலின் பெருமையை விளக்குவது. வெல்லுவது வேல். எதுவெல்லும் ? அறிவு, ஞானம் என் பனவே வெல்லும். வேல் முருகனுக்கு ஒரு சக்தி. 'சத்திதன் உரு ஏதென்னில் தடை யிலா ஞானம் ஆகும்.' வேல் முருகனுக்கு ஞானசக்தியாக விளங்குவது வேல் ஞானம், சூரன் அஞ்ஞானம். அஞ்ஞானத்தை ஞானம் வென்றது. வேலின் பெருமை யைத் தொல்காப்பியரும் 'பெரும்பகை தாங்கும் வேல்' என்று குறிப்பிட்டுச் சிறப் பித்தார்.

வேல் அஞ்ஞானத்தை அறவே ஒழிப்பது. ஆதலின் ஞானம் வேண்டுவோர் வேலைத் தொழுதல் வேண்டும். பண்டைநாளில் வேற்படைக்கும் தனிக்கோயில் அமைத்துத் தொழுது வந்தனர் நம் முன்னோர் ! புகார் நகரில் 'வேற்கோட்டம்' இருந்ததாகச் சிலப்பதிகாரம் தெரிவிக் கின்றது. செவ்வந்திப்புராண ஆசிரியர்' 'வாகையே சுமக்கும் வேலை வணங்குவது எமக்கு வேலை' என்று நயம்படக் கூறு கின்றார். நாம் வேலை வணங்குவதை வேலையாகக்கொண்டு உய்ய முயலுதல் வேண்டும். பிறகடவுளர்கள் தம்மை எதிர்த்த அசுரர்களை அழித்துக் கொன்ற தாகவே நாம் பெரும்பாலும் அறிகின் றோம். ஆனால் முருகன் சூரனை அழித் திலன். பகைவனையும் காத்து, பண் பார்ந்த அன்பனாக மாற்றி ஆட்கொண் டருளினன். சூரனைக் கோழிக்கொடியும் மயில் ஊர்தியுமாக முருகன் ஏற்றுக் கொண்டு உவந்தருள்புரிந்தான். கடவுட் டன்மை காத்தலில் உள்ளதே யன்றிக் கொன்றொழிப்பதில் இல்லை. வைதாரையும் பகைவரையும் கூட, வாழவைக்கும் பண் பினன் முருகன்.

தீயவை புரிந்தா ரேனும்
குமரவேள் திருமுன் உற்றால்
தூயவர் ஆகி மேலைத்
தொல்கதி யடைவர் என்கை
ஆயவும் வேண்டும் கொல்லோ ?
அடுசமர் அந்நாட் செய்த
மாயையின் மகனும் அன்றோ
வரம்பிலா அருள்பெற் றுய்ந்தான் '

### 6. தேவ காண்டம் :

சூரனை வென்ற பிறகு, முருகன் தேவர்களைச் சிறையினின்று விடுவித்து, விண்ணுலகில் குடியேற்றினன். தேவேந்திரனுக்கு முடி சூட்டியருளினன். அதனால் பெருநலமும் மகிழ்வும் உற்ற தேவேந்திரன், நன்றியுணர்வுடன் வழிபட்டு, நயந்தினிது வேண்டிக்கொள்ள, முருகன் தெய்வயானையம்மையைத் திருப்பரங்குன்றத்தில் மணம் புணர்ந்து அனைவரையும் மகிழ்வித்தான். வடமொழிக் கந்த புராணத்தில் வள்ளியம்மையின் திருமணமும் இக்காண்டத்திலேயே கூறப்படுகின்றது. தமிழில் தட்சகாண்டத்தில் கூறப்பெறும். முருகனுக்குத் தெய்வயானையம்மை கிரியா சக்தியும், வள்ளியம்மை இச்சாசக்தியுமாவர். முருகனின் வலப்புறத்தில் வள்ளியம்மையும், இடப்புறத்தில் தெய்வயானையம்மையும் விளங்குகின்றனர்.

### முடிவுரை :

கந்தபுராணம் ஒருவகையில் நம்'சொந்த புராணம்' எனலாம். சூரன் முதலிய அசுரர்கள் எக்காலத்திலோ இருந்து மறைந்தவர்கள் அல்லர். சூரபதுமன் சிங்கமுகன் தாரகாசுரன் என்னும் மூவரும் முறையே ஆணவம் மாயை கன்மம் என்னும் மும்மலங்கள் என்றும், அவர்களாற் சிறையிடப்பெற்ற தேவர்கள் பசுவர்க்கங்கள் என்றும், அசுரர் மூவரையும் அழித்து முருகன் தேவர்களை ஆட்கொண்டமை ஆணவம் முதலிய மும் மலங்களை வீட்டி' உயிரை ஞானாசிரியனாகிய கடவுள் ஆட்கொண்டருளுதலாம் என்றும், கொள்ளுதற்குரிய நுட்பப்பொருள்கள் பல, கந்த புராணத்தில் உள்ளன.

இனி, கந்த புராணத்தில் வரும் சூரபதுமனின் மதம் "மிண்டிய மாயாவாதம்" என்றும், தட்சனின்மதம் பாஞ்சராத்திர மதம் என்றும், தாருகாவன முனிவர்களின் மதம் பூர்வமீமாம்சை என்றும், இந்திரனின் மதம் உலகாயதம் என்றும், இம்மதங்களெல்லாம் அவற்றிற்குரியவர்கள் அழிக்கவும் அடக்கவும் பட்டதனால் மறுத்தொழிக்கப் பெற்றனவாய், சைவ சித்தாந்தச் செந்நெறியின் சாலபினை யுணர்த்தி நிற்கின்றன எனவும், அறிஞர்கள் கூறுவது உண்டு.

மாயையில் வலியோன் ஆகி
　　மால்முத லோரை வென்றே
ஆயிரத்தோ ரெட்டு அண்டம்
　　அரசுசெய்து உகம்நூற் றெட்டுக்
காயமது அழிவின் றாகிக்
　　கடவுளர்க்கு அலக்கண் செய்த
தீயசூர் முதலைச் செற்ற
　　குமரன்தாள் சென்னி சேர்ப்பாம்.

இந்திரர் ஆகிப் பார்மேல்
　　இன்பமுற் றினிது மேவிச்
சிந்தையில் நினைந்த முற்றிச்
　　சிவகதி அதனிற் சேர்வர்!
அந்தமில் அவுணர் தங்கள்
　　அடல்கெட முனிந்த செவ்வேற்
கந்தவேள் புராணம் தன்னைக்'
　　காதலித்துஓது வோரே!

—கச்சியப்பசிவாசாரியர்.

[சென்னை, தியாகராயநகர், தருமபுர ஆதீன சமயப் பிரசார நிலையத்தில், கந்தர் சஷ்டி விழாவில், ஆற்றிய சொற்பொழிவினைத் தழுவியது. (2-11-67)

—ஆசிரியர்.

